# ★ ஸ்ரீ குமரகுருபரர் ★



ஆடி 1 16—7—80

தொகுதி 2 பகுதி 10





உ

சிவ சிவ

# ‘ஸ்ரீ குமரகுருபரர்’

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.

சிறப்பாசிரியர்:

பன்மொழிப்புலவர்

டாக்டர். திரு. தெ. பொ. **மீனுட்சிசுந்தரனுர்**, மதுரை.

ஆசிரியர் குழு:-

பேராசிரியர்

**திரு. அ. ச. ஞானசம்பந்தன்**, M. A., சென்னை-28

**திரு. கம்பன் அடிப்பொடி**, காரைக்குடி

**திரு. மு. அருணுசலம்**, M. A., திருச்சிற்றம்பலம்

**திரு. கா. ம. வேங்கடராமையா**, M. A., அண்ணுமலைநகர்

மகாவித்துவான் **திரு. ச. தண்டபாணி தேசிகர்**, மதுரை

மகாவித்துவான்

**திரு. சி. அருணைவடிவேல் முதலியார்**, அண்ணுமலைநகர்

**திரு. க. வச்சிரவேல் முதலியார்**, B. A., L. T., மதுரை

புலவர் **திரு. கீரன்**, லால்குடி

டாக்டர் **திரு. டி. பி. சித்தலிங்கையா**, M. A., கல்கத்தா

**திரு. கு. சுந்தரமூர்த்தி**, M. A., திருப்பனந்தாள்

நிர்வாக ஆசிரியர்:-

**ம. வே. பசுபதி**, திருப்பனந்தாள்

---

அட்டையில்:

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருவுருவம்

ஆவுடையார் கோயில்



ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 2 ஆடி பகுதி 10

## சிவனும் சீவனும்

உலகியல் ஆண் பெண் தொடர்பு போலவே இறையியலின் சிவசிவ ஐக்யம் அமைகிறது. இந்த அற்புதமான உண்மையைப் பண்டார மும்மணிக்கோவை எட்டாம் பாடலின் இறுதிப்பகுதி விளக்குகிறது. ரசம் மிகுந்த – விரசம் கலவாத இந்தச் சுவையான பகுதியின் தெய்விக மேன்மையை **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்** தக்க எடுத்துக் காட்டுக்களுடன் விளக்கியருளியுள்ளார்கள்.

'விதி'ப்படிதான் எல்லாம் நடக்கும் என்றால் கடவுளை வழிபடுவதன் இம்மைப்பயன் என்ன? எனத் திரு. முத்து. மெய்கண்டதேவன் அவர்கள் எழுப்பியுள்ள வினவுக்கு நல்லறிஞர்கள் பலரும் பொருத்தமான விடைகள் நல்கியுள்ளார்கள்.

'மறத்திற்கும் அன்பு துணை' என்கிறான் தெய்வப்புலவன். அது என்ன மறம்? திரு. கோ. வன்மீகநாதன் விளக்குகிறார்.

இந்த இதழிலிருந்து களந்தை தத்தீஸ்வரர் பதிற்றுப்பத்தந்தாதி வெளிவருகிறது. வெளிவராத இலக்கியத்தை வெளியிடும் பகுதி இது.

திரு. பெ. திருஞானசம்பந்தன் அவர்கள் சைவ நற்சிந்தனை வழங்குகிறார். அச்சிந்தனை பெண்ணாகடம் சமயப்பேரவையின் சார்பில் நடைபெற்ற திருமுறை மாநாட்டின் தலைமை உரையிலிருந்து எடுத்தவை ஆகும்.

திரு. கண்ணபிரானின் 'ஏதாவது பேசுங்கள்' என்னும் தத்துவச் சிறுகதையும் இந்த இதழில் வெளியிடப் பெற்றுள்ளது.

அடுத்த இதழ் விடையரங்கத்திற்குரிய வினா, கீழே கொடுக்கப் பெற்றுள்ளது. வாசகர்களின் விடைகளும் வரவேற்கப்படுகின்றன.

வழக்கம்போல இறக்குமதி, திருக்கணிதபஞ்சாங்கம், சாஸ்திர விளக்கம் ஆகியனவும் இந்த இதழை அலங்கரிக்கின்றன.

— நி. ஆர்.

---

### அடுத்த இதழுக்கான விடையரங்கப்பகுதி வினா:-

பரந்து விரிந்து கிடக்கும் உலகின்கண் இறைவன் திருவிளையாடல்கள் அனைத்தும் குறிப்பாகவும் சிறப்பாகவும் தமிழ்நாட்டில்தான் நடைபெற்றதாகப் புராணங்கள் கூறுகின்றனவே, அதற்குக் காரணம் என்ன?

— கோ. கமலபாஸ்கரன்

சிவ சிவ

# தில்லையில் ஆடிச் சுவாதியில்
# இன்னிசைத் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அவர்களின் ஆணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

ரௌத்திரி ஆண்டு ஆடித்திங்கள் 6ஆம் நாள் (21—7—1980)
திங்கட்கிழமை ஆடிச்சுவாதியன்று

## சிதம்பரத்தில் திருமுறை விழா

திருமுறைவாணர்கள் :

1. சுரலய இசைவள்ளல் திரு. M. கனகசபைப் பிள்ளை,
   ஸ்ரீ காசிமடம் சிவ சிவ ஒலிமண்டப ஓதுவார், சிதம்பரம்.
2. திரு. M. சுப்பிரமணிய முதலியார்,
   ஸ்ரீ காசிமடம் சட்டளை ஓதுவார், திருநாரையூர்.
3. கலைமாமணி தருமபுரம்
   திரு. P. சாமிநாத முதலியார், சென்னை.
4. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
   திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்,
   திருவாவடுதுறை.
5. திரு. S. முத்துக் கந்தசாமி தேசிகர்,
   ஸ்ரீகாசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி.
6. தேவார இசைமணி,
   திரு. P. ராமச்சந்திர ஓதுவார், விருத்தாசலம்.
7. திரு. கோ. வேங்கடராமன், மிருதங்கம், திருப்பனந்தாள்.
8. திரு. N. ஆறுமுக தேசிகர், பிடில், விழுதியூர்.
9. திரு. T. R. கிருஷ்ணன், பிடில், கும்பகோணம்.

அருளாணையின் வண்ணம்,
N. சொக்கலிங்கம் செட்டியார்,
ஏஜண்டு, ஸ்ரீகாசிமடம், சிதம்பரம்.

---

குறிப்பு : சிதம்பரம் ஸ்ரீமந் நடராஜப்பெருமான் சந்நிதியில் இரவு 8-மணிக்குத் தொடங்கித் திருமுறைவாணர்கள் சிவமே நிலவிய திருவீதிகளில் இரவு முழுவதும் திருமுறை ஓதிக் காலை 6-மணிக்கு ஸ்ரீமந் நடராஜப்பெருமான் சந்நிதியில் நிறைவு செய்வார்கள்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்

# அருள் பழுத்த கனிச்சுவை

கடவுளை ஆண் என்றும், சீவனைப் பெண் என்றும் அறிவித்தாயிற்று. ஆணும் பெண்ணும் கூடிவாழும் கருத்தொருமித்த வாழ்க்கை வாழவேண்டுமே!

இப்படியிப்படி வாழவேண்டும் என்று யார்கேட்பது? ஆண்தான் கேட்கவேண்டும்! சர்வேஸ்வரன்தான் ஆண் என்று ஆனபிறகு, சர்வேஸ்வரனு ஜீவனைப் பார்த்து இப்படியிப்படி வாழவேண்டும் என்று கேட்கப் போகிறுன். அது நிச்சயமாக இல்லை. பெண்தான் நாணமுடையவளாயிற்றே அவளெப்படிக் கேட்கமுடியும்? இங்கேதான் உலகியலுக்கும் இறையியலுக்கும் வித்யாசம் வருகிறது.

இறையை அடைவதற்கு — இறையோடு கலப்பதற்கு நாணம் ஒரு தடைக்கல்! இப்படிச் சிந்தித்துப் பார்ப்போமே! விபூதி பூசிக்கொள்ள வெட்கப் படுகின்றவனும், கோயிலுக்குப் போகக் கூச்சப்படுகின்றவனும் சமயச் சார்புடையவன் ஆகமுடியுமா? நாணம் என்பது பழி பாவங்களுக்கு அஞ்சுதல் என்ற பொருளில் வரும்போது அந்தநாணம் சமய உலகிற்குத் தடைக்கல் ஆகாது; ஆணிவேர் ஆகும்.!

'அழுது காமுற்று அரற்றுதலுக்குக்' கூச்ச சுவபாவம் தடைதானே! கூச்ச சுவபாவம் நீங்கிய பிறகே பக்தி மார்க்கம் பரிணமிக்கிறது! இந்த முறையில் சீவனுகிய பெண்,

சர்வேஸ்வரனைப் பார்த்து நாம் 'நீயும் நானுமாய் ஏக போகமாய்' இப்படி யிப்படி யெல்லாம் இன்பம் காண வேண்டும் எனக் கேட்கும் பக்குவம் பெறுகிறது.

உலகில் சாயான்ய மானுடம் துய்த்து ஆழ்ந்து போகும் சிற்றின்பம் மாதிரிக்காகப் படைக்கப் பெற்றது. பழக்கடைக்காரன் மாதிரிக்காக ஒருதிராட்சைக் கனியைக் கொடுக்கிறான். 'அதுவேபோதும்' என்று வருகிறவன் ஏமாற்றுக்காரன் மட்டுமல்ல; ஏமாளியும்கூட. மேற் கொண்டு காசுகொடுத்து வாங்கவேண்டும் என்பதற்காகத் தானே அந்த மாதிரியைக் கொடுத்தான்! இறைவன் மண்ணுலகில் படைத்த போகங்கள் மாதிரிக்குக் கொடுத்தவை; இந்த இன்பமே இப்படி இருக்கிறதே 'அந்தமில் இன்பம்' என்பது எப்படி இருக்கும் என்னும் வேட்கையைத் தூண்டுவதற்காகத் தரப்பெற்றவை.

ஸ்ரீ குமரகுருபரர் ஜீவனைப் பெண்ணாக அறிவித்து அந்தமில் இன்பத்தைத்தான் வேண்டுகிறார். 'நாண்அழிநிலை' யில் பெண்ணே அந்த இன்பத்தைக் கேட்பது பொருத்த மாக இருக்கிறது.

மாதிரிக்குக் கடைக்காரன் கொடுத்த திராட்சையின் பெருக்கம்தானே விலைகொடுத்து வாங்கும் திராட்சைக் கொத்து! அதேபோலத்தான் உலகபோகங்களின் முடிவில்லாத பெருக்கமே பேரின்ப மாகும். எனவே இந்த ஜீவனின் கோரிக்கைகள் சிற்றின்ப பாணியிலேயே அமைகின்றன.

'நாயகனே! காதலுடன் என் கையைப் பிடித்துக் கொள்; அருளுடன் பிடித்துக் கொள்; பின்னரும் அருள்செய். நீயும் நானுமாகஇருக்க வேண்டியது 'வீட்டில்' தான்! ஏனென்றால் ரகசியம் வேண்டாமா? ஒருவரும் உணரமுடியாத பரம வீட்

டில் நீ எனக்கு ஆரா இன்பம் அளிக்க வேண்டும். ஒருவரும் உணரக் கூடாது என்பதற்காக இருட்டான இடத்தைத் தேர்ந்தெடுக்கக் கூடாது. அது ‘பெரு வெளி மண்டப மாக’ இருக்க வேண்டும். நாதாந்தம் எனப்பெறும் திரு மலர்கள் தூவிய அமளியில் நான் முற்றிலுமாகப் புளகாங் கிதம் அடையும்படி என் வார்த்தைகள் தருமாறும்படி ஆரா இன்பத்தை நீ அளித்தருள வேண்டும். என் உள் ளொலியாகிய நாதம் பறவைகளைப்போல முழுங்க வேண் டும். இன்பத்தின் போது பானம் அருந்துவார்கள் என் பார்களே, நான் உன்னிடமிருந்து ஞானமாகிய குறையாத அமுத பானத்தை அருந்த வேண்டும். கருவிகள் செய லற்றுப் போக வேண்டும்; பரவசம் உண்டாக வேண்டும்; பரமானந்தம் என்றும் ஆனந்தங்களுக் கெல்லாம் பெரிய ஆனந்தமாகிய கடலுள் நான் படிய வேண்டும். என்றும் எப்பொழுதும் ஒரே நிலையுடைய இயற்கையை நான் பெற்று இனிதாகவும் தெவிட்டாமலும் இருக்கும் இன் பத்தை எனக்கு அருள்க’ - என நாயகனாகிய சிவனைப் பார்த்து, சிவனின் வேறற்ற குருநாதனைப் பார்த்து நாயகி யாகிய ஜீவன் வேண்டுவதாக முடிக்கின்றார்.

இங்கு வேண்டுவதெல்லாமே பேரின்ப நிலைகள் என்பது நம்மால் எளிதில் உணர்ந்துகொள்ள முடியும்.

‘காதலின் எமை அருள் கைப்பிடித்து அருளி
ஒருவரும் உணராப் பரம வீட்டில்
இருள்அறை திறந்த பெருவெளி மண்டபத்(து)
உயர்நா தாந்தத் திருமலர் அமளியில்
புளகம்மெய் போர்ப்ப மொழிதடு மாற
உள்ளொலி நாதப் புள்ளொலி முழங்க
ஞானவா ரமுத பானம தார்ந்துக்
கருவிகள் கழலறு பரவச மாகிப்
பரமா னந்தப் பரவையுள் படிந்து

பேரா இயற்கை பெற்று இனிது இருப்ப
ஆரா இன்பம் அளித்தருள் எமக்கே'

(பரம்-இகத்தில் அடங்காதது; நாதாந்தம்-நாதத்தின் எல்லே; அமளி - படுக்கை; புளகம் - மயிர்க்கூச்செறிதல்; புள்-பறவை; ஆர்ந்து-குடித்து; சழன்று-செயலற்று; பரவை-கடல்; பேரா இயற்கை-என்றும் எப்போதும் ஒருதன்மைத் தாய இயல்பு; ஆரா - தெவிட்டாத.)

முப்பத்தொன்பது அடிகளேக் கொண்ட இவ்வெட்டாம் பாடல் இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைத் தன்மைகளே முற்றிலுமாக ஆராய்ந்துரைப்பதுடன் உயிரின் சரியான வேட்கையையும் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

— சிவ சிவ

---

## இதமான வாழ்வுக்கு எளியவழிகள்

### ஆஸ்த்மா, இரத்த அமுத்தம்

அ) தாம்பிர டம்ளர் ஒன்றில் 100மில்லி தண்ணீருடன் சிறிய துளசிஇலேயை இரவில்போட்டு காலே வெறும்வயிற்றில் துளசிஇலேயை மென்றுதின்று அதன் தண்ணிரைப் பருகினல் ஆரத்தஅழுத்தம் சீராகி, இருதயம் பலம்பெறும், ஆஸ்த்மா நோயும் குறையும்.

### கண் கட்டிக்கு

ஆ) திருநீற்றுப் பச்சிலேயின் சாறில் சங்கை உறைத்துப் பூச உடன் கண்கட்டி குணமாகும்.

### சொறி சிரங்கு

இ) பொன்னுவிதை இலேயைப் பசுமஞ்சளுடன் அரைத்து போட்டால் புண் ஆறும்.

### தீப்பட்ட புண்ணுக்கு

ஈ) முட்டையின் வெண்கருவைக் காய்ச்சிய தேங்காய்எண்ணெயில் கலந்து தீப்பட்ட புண்ணில்தடவ தீப்பட்டபுண் குணமாகும்.

டாக்டர். N. சடையப்பன்

உ

சிவ சிவ

# மதுரையில்
# பெரியபுராணச் சொற்பொழிவுகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அவர்கள் அருளாணையின் வண்ணம் நடைபெறுவது
(17—7—80 முதல் 25—7—80 முடிய)
ரௌத்ரி ஆண்டு ஆடித்திங்கள்
2-ஆம் நாள் முதல் 10-ஆம் நாள் முடிய

**பெரியபுராணத்தில் ஒன்பது சொற்பொழிவுகள்**

இடம் : தருமையாதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடம்.
347, வடக்கு மாசிவீதி, மதுரை.

நிகழ்ச்சி நிரலிற் காணும் வண்ணம் நாடோறும்
இரவு 7 மணி முதல் 8-30 மணி வரை
சைவப் புலவர்களால் விரிவுரை நிகழ்த்தப்பெறும்.

நமரங்காள் வருக! தொண்டர்சீர் பரவுக!

மதுரை,
10—7—80.

அருளாணையின் வண்ணம்,
**நா. குருசாமி தேசிகர்,**
ஸ்ரீகாசிமடம் கட்டளை, மதுரை.

---

குறிப்பு : (1) 21—7—80ம் தேதி தில்லையில் திருமுறைத் திருவிழாவும், திருவஞ்சைக்களத்தில் அன்னம் பாலிப்பும் ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் நடைபெறும்.

(2) திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித்தம்பிரான் சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் 21-8-80ம் தேதி ஆவணி மூல நாளில் திருச்சியிலும், ஐப்பசிச் சதய நாளில் தஞ்சையிலும் இன்னிசைத் திருமுறை விழாவும், கந்தர் சஷ்டி விழா நாட்களில் காஞ்சிபுரத்திலும், மதுரையிலும் கந்தபுராணச் சொற்பொழிவுகளும் நடைபெறும்.

சிவ சிவ

# மதுரையில் பெரியபுராணச் சொற்பொழிவுகள்

| எண். | நாள். | பொருள். | சொற்பொழிவாளர்கள். |
|---|---|---|---|
| 1. | 17—7—80 | திருமலைச் சருக்கம் | மகாவித்துவான் திரு. ச. தண்டபாணிதேசிகர். |
| 2. | 18—7—80 | தில்லைவாழந்தணர் சருக்கம் | செல்வி. எஸ் பத்மாவதி |
| 3. | 19—7—80 | இலைமலிந்த சருக்கம் | புலவர் திரு. தா. குருசாமி தேசிகர். |
| 4. | 20—7—80 | மும்மையாலுலகாண்ட சருக்கம் | பேராசிரியர் திரு. அ. சங்கரநாராயணன் M. A., M. Litt., |
| 5. | 21—7—80 | திருநின்ற சருக்கம் | புலவர் திரு. யாழ். சுந்தரம் B A, B. T., |
| 6. | 22—7—80 | வம்பறுவரிவண்டு சருக்கம் (திருஞானசம்பந்தர் புராணம்) | சித்தாந்த வித்தகர் திரு. தி. சு கோவிந்தசாமி பிள்ளை. |
| 7. | 23—7—80 | ஏயர்கோன் முதல் சோமாசி மாறர் முடிய | புலவர் திரு. நீ. சீ. சுந்தரராமன். |
| 8. | 24—7—80 | வார்கொண்ட வனமுலையாள் சருக்கம் | புலவர் திரு. சி. கல்யாணசுந்தரம். |
| 9. | 25—7—80 | எஞ்சிய ஆறு சருக்கங்கள் | முதுபெரும் புலவர் திரு. க. வச்சிரவேல் முதலியார், B. A., L. T., |

# கந்தர் கலிவெண்பாவுள் சமயம்

மு. அருணுசலம்

## III. அகப்புறச் சமயம்

இதுவரை, சமயங்களில் அகம் புறம் என்று இரு பெரும்பிரிவு களில், புறம் என்ற பிரிவில், புறப்புறம் புறம் என்ற இரண்டும் பேசப்பட்டன. இவ்விரு பிரிவுகளும் சிவத்தைக்கொள்ளாதவை. புறப்புறம் வேதத்தையும் சிவாகமங்களையும் கொள்ளாது. ஆகவே வேத நிந்தகம் விளக்கும் சமயங்கள். புறம், வேதத்தைக்கொள்ளும், சிவாகமத்தையும் சிவத்தையும் கொள்ளாத சமயங்கள். இனி இங்கு, வேதம் சிவாகமம் சிவம் ஆகியவற்றைக் கொள்பவைகளான அகச் சமயங்களைப் பேசுவோம் இவை இருபெரும் பிரிவுகள். அகப்புறம், ஆணவமலத்தைக் கொள்வதில்லை, ஆகவேதான் இவை அகப்பகுதி யில் புறம். மற்றவை ஆணவமலத்தையும் உடன்படும். ஆகவே அவை அகச்சமயங்கள் எனப்படும்.

இனி அகப்புறச் சமயங்கள் பாசுபதம் மாவிரதம் காபாலம் வைரவம் ஐக்கியவாத சைவம் என்ற ஆறு என்று முன் சொல்லப் பட்டன. இவற்றைச் சிறிது விளக்கிக்கூறுவோம்.

சித்தாந்த சாத்திரங்கள் புறப்புறச் சமயங்கள், புறச்சமயங்கள் என்ற இரண்டையும்கூறி மறுக்கின்றன; அகச்சமயங்களையும் எடுத்துக் கூறி மறுக்கின்றன. இந்த நிலையைச் சித்தியார் பரபக்கத்திலும், சிவப்பிரகாசத்திலும் அதன் உரைகளிலும், சங்கற்ப நிராகரணத்தி லும் காண்கிறோம் ஆனல் அகப்புறம் என்று சொல்லுகின்ற சமயங் களை எங்குமே சாத்திரக்காரர்கள் சொல்லவில்லை. அகப்புறம் என்பன பாசுபதம் மாவிரதம் காபாலம் வாமம் வைரவம் ஐக்கிய வாதசைவம் என்பன; இவ்வாறினுள் ஐக்கியவாத சைவம்மட்டும் ஒரு தத்துவக் கொள்கை உடையதென்று கருதி, சங்கற்ப நிராகரணம் இதை அகச் சமயங்களை மறுக்குமிடத்து முதலில் வைத்து மறுக்கிறது. மற்ற ஐந்தையும் யாருமே சொன்னதில்லை. காரணம், இவ்வைந்தும் சமய ஆசாரங்களே ஒழிய இவற்றில் சமயத் தத்துவக் கோட்பாடுகள் இல்லை. தத்துவ சாஸ்திர வரலாறு எழுதிய தாஸ்குப்தா கூட, பாசு பதம் ஒன்றுக்குத்தான் தத்துவக்கொள்கை உண்டு, மற்றவற்றிற்கு

இல்லை என்று எழுதுகிறார். பாசுபதத்தைக் கூறுவது பாசுபத சூத்திரங்கள்; நகுலீசர் செய்தவை. இந்தச் சமயமும் வெறும் சடங்குகளைச் சொல்வதே அன்றிச் சமயத்தத்துவங்களைச் சொல்ல வில்லை என்பது அவர் கருத்து. நம் சமய நூல்கள் கண்டிக்குமிடத்து, பெத்தம்-முத்தி என இருபிரிவாகக் கொள்கைகளைக் கருதி, இரண்டை யும் தனித்தனியே எடுத்துரைத்து மறுக்கின்றன. இதைச் சங்கற்ப நிராகரணத்தில் தெளிவாய்க் காணலாம். பெத்தம் முத்தி போன்ற நிலைகளில் திட்டமான கோட்பாடுகள் இல்லாமையால் நம் சந்தான ஆசாரியர் யாரும் அகப்புறச் சமயங்களைச் சமயங்களாகக் கருதவும் இல்லை, எடுத்துப் பேசவும் இல்லை.

1 பாசுபதம் :- ஆன்மாக்கள் பல. நித்த மாயையில் வியாபகம் உடையவை, காரண காரியக் கூட்டுறவால் தோன்றும் ஞானத்தால் தனித்தனியாக உள்ளன. மாயை, கன்மம் என்ற இரண்டால் மட்டும் இன்ப துன்பங்களை அனுபவிக்கும், ஆணவமலம் என்பதில்லை. தீக்கை பெற்றவனிடத்து இறை ஞானம் வரும். தீக்கைக்கு அடிப்படை உலகத்தினிடத்து உண்டாகும் உவர்ப்பு. மனிதன் வயது முதிர்ந்து குடும்ப பாரத்தைப் புதல்வனிடம் ஒப்புவித்துத் துறவறத்தில் செல் வதுபோல, ஆன்மா இறை ஞானம் பெற்ற பிறகு ஈசனும் தன் னுடைய குணங்களை அவன்பால் பற்றவைத்துத் தான் அதிகாரத்தி லிருந்து ஒழிவு பெற்றிருக்கிறான் என்பது பாசுபதமதம்.

மற்றவற்றைப்போலன்றிப் பாசுபதமதம் என்று ஒரு தனிச்சமய மாகவே நாட்டின் சில பகுதிகளில் இது இருந்தது. நகுலீசர் என்பவர் இம்மதத்தை நிறுவினார் என்றும், அது காரணமாக இம்மதம் நகுலீச பாசுபதம் என்று பெயர் பெற்றதாகவும் சொல்வதுண்டு. மற்றவை போலன்றி இதற்குத் தனியான சாத்திரமும் உண்டு. அதற்குப் பாசுபத சூத்திரம் என்ற பெயருண்டு. செய்தவர் நகுலீசர். அதற்குக் கௌண்டினியர் வியாக்கியானம் செய்திருக்கிறார். ஆனால் பாசுபத மதத்துக்குத் தத்துவம் எதுவும் சொல்லப்படவில்லை. சடங்குகள் சொல்லப்படுகின்றன. பாசுபதர், மாகேச்சுரர் எனப்படுகின்றனர். இவர்களுக்குச் சிவலிங்க வழிபாடு முக்கியமானது. திருநீறு அணித லும், சிவகண வழிபாடும் முக்கியமானவை. ஒரு காலத்தில் இவர்கள் வழிபாட்டில் நரபலியும் இடம் பெற்றதென்பர். ஆதி சங்கரர் பிரம சூத்திர பாஷ்யத்தில் மாகேசுவரர் என்றே குறிப்பிடுகிறார். இவர்கள் பாசுபதர் என்பது ஆன்றோர் கருத்து.

பாசுபத சமயத்தில் ஐந்து கருத்துக்கள் முக்கியமானவை. பதி-பசுபதியே. எல்லாவற்றுக்கும் காரணர். காரணத்திலிருப்பது பிற எல்லாக் காரியமும் - வித்தை, கலை, முதலானவை பசுக்கள், பூதங்கள் கர்ம - ஞான - இந்திரியங்கள் மனம் எல்லாம். கருத்துயோகம் - பதியைப் பசு அடைகின்றதாகிய மனத்தின் செயல். பிறகு விதி - தர்ம சாஸ்திர வாதிகள். இறுதியாக துக்காந்தம் துன்பத்திலிருந்து விடுதலை. இந்தப்பாசுபத சமயம், ருத்ரசிவம் என்ற கருத்தின் வளர்ச்சியாகும். இது மகாபாரதத்தில் சொல்லப்பட்ட விளக்கம். இன்று பாசுபத சைவம் குஜராத்தில் இருக்கிறது. அது கி. மு இரண்டாம் நூற்றுண்டில் தொடங்கி வழங்குவதென்றும் சொல்வர். அதன் முத்திநிலை சைவ சித்தாந்திகள் கூறும் சாமீப்பிய முத்தியாகும்.

2. மாவிரத மதம்:- கடுமையான விரதங்களை மேற்கொண்டமையால் இச்சமயத்தினர் மகாவிரதியர் (மாவிரதியர்) என்று பெயர் பெற்றனர். இவர்களுக்குப் ஆணவமலம் உடன்பாடில்லை. இவர்கள் கன்ம மார்க்கத்தைப் பின்பற்றுவர். திக்கை பெற்று எலும்பு மாலை அணிதல், பிணம் சுட்ட சாம்பல் பொடி பூசுதல் முதலிய ஒழுக்கமே இவர்களுடைய ஆசாரம். சரியை மார்க்கமும் உண்டு. இவர்களில் முத்தரானோர் சிவனுக்குச் சமமாக எல்லாக் குணங்களும் பெறுவர். இதுவே இவர்களது முத்திநிலை.

மானக்கஞ்சாற நாயனுர் தமது மகளை ஏயர்கோன் கலிக்காம நாயனுருக்குத் திருமணம் புரிவிக்க ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்த சமயம், அங்கு சிவபெருமானே அவருடைய பக்தியைச் சோதிக்க வேண்டி ஒரு மாவிரத முனிவன் வேடத்தில் வந்து நாயனுருடைய மகளின் கூந்தலைத் தமது பஞ்சவடிக்கு ஆகும் என்று சொல்லி அரிந்து கொடுக்குப்படி கேட்டார் என்று பெரிய புராணம் கூறும். அங்கு மாவிரதியர் கோலம் விரிவாக வருணிக்கப்பட்டுள்ளது.

காளாமுகம்:- காளாமுகம் என்று கூறும் மதம் பெரும்பகுதி மாவிரதத்தை ஒத்தது. இதை லகுலீசர் செய்தார் என்று சொல்வார்கள். இச்சமயத்தார் ஒரளவு பக்தி நெறியில் சென்றவர்கள். பாடலும் ஆடலும் மந்திரமும் இவர்கள் நெறி. அட்டமி, சோமவாரம், சிவராத்திரி முதலான நோன்புகள் நோற்க அஞ்ஞானம் நீங்கும். நீங்கவே, தாரகை ஒளி சூரிய ஒளியில் கலப்பதைப்போல உயிரின் ஒளி சிவ ஒளியுடன் கூடிவிடும் என்பது இவர்கள் கருத்து.

3. காபாலமதம்:- பிரம்ம கபாலத்தைக் கையில் ஏந்திச் சென்றமையால் இம்மதத்தார் இப்பெயர் பெற்றார்கள். ஆன்ம இயல்பும் பாச இயல்பும், முந்தையோரைப்போலவே கொள்வர். சாத்திரப்படி இவர்களுக்குத் தீக்கை உண்டு. இவர்கள் கையில் பச்சைக்கொடி பிடித்து மனித கபாலத்தில் பிச்சை ஏற்று உண்பர். பந்தங்களில் நீங்கிச் சிலம் ஆவேசித்தலால் சிவ குணங்களைப் பெற்றுச் சிவசமம் ஆதலே இவர்கள் முத்திநெறி.

இந்த மூவரும் முறையே சங்கிராந்த சமவாதி, உற்பத்தி சமவாதி, ஆவேச சமவாதி என்று சொல்லப்படுவர். மாயை, வித்தை, காலம் என்னும் தத்துவங்களில் வதியும் உருத்திரர்கள் இம்மூன்று சமயத்தையும் செய்தார்கள் என்பது மரபு. இவர்களுடைய முத்திநிலை சாயுச்சியம் அல்ல, பதமுத்தியே.

பாசுபதருக்கு தத்துவப் பொருள்கள் ஓரளவு நூல்கள் கூறுமேயன்றி, மாவிரதியார், காளாமுகர், காபாலிகருக்கு அந்தத் தத்துவக் கோட்பாடுகளும் இல்லை என்பதே ஆன்றோர் கருத்து.

4. வாமமதம்:- வாமம் என்பது சக்தி மார்க்கம். பாற்கரியன் கூறியவாறு சடமும் சித்துமாகிய அனைத்துலகும் சத்தியின் பரிணாமம். வாமநூல் வழியொழுகி சத்தியில் இலயித்தலே முத்தியென்றும், பராசக்தி என்னும் பிரகாசத்தில் ஒன்றுபடுதலே முத்தி என்றும் இச் சமயம் கூறும். வாமநூல் செய்தவர் சித்தபுருடர். பொதுவாக சக்தி மார்க்கம், வாமம் (இடப்புறம், அசுத்தம்) என்றும் தக்ஷிணம் (வலப்புறம், தக்ஷிண மார்க்கம், சுத்தம்) என்றும் இருவகை. வாமமார்க்கம், மஞ்சமகாரங்களைக் கொண்டது. மது, மாமிசம், மத்ஸயம், மைதுனம், முத்திரை என்பன, புலால் உண்டு மதுவருந்தி மாதரைக்கூடி வாழ்ந்து சத்தியின் அருள்பெற்று வீடு எய்தலாம் என்பது இம்மதம். இதில் சுத்த மார்க்கமாவது அறிவாவதும், அறிவிப்பதும் பஞ்சக் கிருத்தியம் செய்வதும் அருளாதலால் அதனைத் தரிசிக்க முத்தியாம் என்று கூறும்.

இந்த வாம மார்க்கம், வாம தந்திரம் மந்திர வாதம் எந்திர வாதம், ஔடதவாதம், கருமவாதம், அத்துவிதவாதம், துவிதவாதம், மிச்சிரவாதம், வாமசித்தாந்தம் என ஒன்பது பிரிவாகவும் தத்துவப் பிரகாசம் கூறும். யாமளம், சாம்பவம் என்பன வாமத்தில் அடங்கும்.

பிற்காலத்தில் வாழ்ந்த அபிராமி அந்தாதி பாடிய அபிராமி பட்டர் வரலாற்றில் வாம மார்க்கம் பற்றிய பேச்சு வருவது அனைவரும் அறிந்தது.

# மறம் எது?

## கோ. வன்மீகநாதன்

அதற்கு முன் ஒன்று கூற விடும்புகிறேன்.

திருக்குறளின் அன்புடைமை என்ற அதிகாரத்தை ஆராயும் போது ஒரு தலைசிறந்த குறள் விடப்பட்டுவிட்டது.

''அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை''.

என்பது அக்குறள்.

வடமொழியில் ''தர்ம அர்த்த காம மோக்ஷம்'' என்ற சொற்றொடரின் மொழி பெயர்ப்பே ''அறம் பொருள் இன்பம் வீடு'' என்ற தமிழ்ச் சொற்றொடர் என்று தவறாகக்கொண்டதின் விளைப் பயன் தமிழில் வரும் 'அறம்' என்ற சொல்லை வடமொழியில் வரும் 'தர்மம்' என்ற சொல்லுடன் ஈடுகட்டியதாகும். தர்மம் என்ற சொல்லுக்குப் பொருள் இடம், காலம் இவற்றால் மாறுபடும். அச் சொல்லை வடமொழி இலக்கியங்களில் பயன்படுத்திய இடங்களை எடுத்து ஆராய்ந்தால் என் கருத்து எளிதில் விளங்கும். அச் சொல்லுக்குப் பொருளை எழுதப்புகின் தமிழ்க்கலைக்களஞ்சியத்தில் பத்து பகுதிகள் போதாது என்றால் மிகையாகாது. அச்சொல்லுக்கு நிலையற்ற (காலத்தாலும் இடத்தாலும் / ஆளாலும் / மாறுபடாத) பொருள் கிடையாது. ஆங்கிலத்திலே கூறுவார்களே ''Absolute meaning'' அது கிடையாது. ஆனால் திருக்குறளில் வரும் அறம் என்ற சொல்லுக்கு இலக்கணத்தைத் திருவள்ளுவர் ஐயம் திரிபு அற வரையறுத்துக்கூறிச்சென்றுவிட்டார். அவருடைய கருத்தின்படி அறம் என்றால் எட்டாம் அதிகாரமாகிய ''அன்புடைமை'' முதலாக முப்பத்தேழாம் அதிகாரமாகிய ''அவாவறுத்தல்'' ஈறாக உள்ள 31 அதிகாரங்களில் கூறப்பட்ட பண்புகளின் கூட்டே அறம் இதற்குச் சார்பு அன்பு என்று இவ்வதிகாரத்தில் திருக்குறள் 8/ வலியுறுத்தப்பட்டது. இதை மட்டும் கூறுபவரை அறியார் என்றார் திருவள்ளுவர். அவ்வண்ணம்கூறி 'மறத்திற்கும் அஃதே துணை' என்ற புரட்சியான கருத்தைக்கூறி முடித்துள்ளார். அக்குறளை, ''மறம்'' என்ற சொல்லுக்கு யாரேனும் இலக்கணம் கூறியுள்ளனரோ என்று கேட்டால் யாரும் கூறவில்லை என்றே சொல்லவேண்டும். எங்கோ

ஓரிடத்தில் ஓரிலக்கியத்தில் மறம் என்றால் வீரம் என்ற பொருள் கூறப்பட்டுள்ளது. இக்குறளுக்கு அப்பொருள் ஒவ்வாது அதாவது சிவபிரானின் எட்டு வீரச் செயல்களை ஒதுக்குவோமானால், மாணிக்க வாசகரின் திருவாசகத்தில் ''திருச்சாழல்'' என்ற பதிகத்தில் ஒரு பாட்டை இங்கு நினைவிற்கொள்வது நன்று.

"அயனை அனங்கனை அந்தகனைச் சந்திரனை
வயனங்கள் மாயா வடுசெய்தான் காணேடீ
நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ''

என்பது அப்பாட்டு. திருக்குறளின்படி மறம் யாதெனின் அன்புடைமை முதலாக அவாவறுத்தல் ஈறாக உள்ள 31 பண்புகளுக்கு எதிர் மறையான பண்புகளே மறம் என்பது எளிதில் விளங்கும். மாணிக்கவாசகர் சுருக்கமாக இரண்டு வரிகளில் கூறிய செயல்கள் அனைத்தும் மறமே. அவை எப்படி ''வானவர்க்குச் சமயமாயின'', அதாவது அன்பே அவையனைத்திற்கும் துணை என்பதைச் சிந்தித்தால் திருவள்ளுவரின் குறள் விளங்கும். இதைப்புரிந்து கொண்ட அறிஞர்கள் மறச்கருணை'' என்ற சொல்லை உருவாக்கினார்கள். 'அன்பே சிவம்'' என்று ஏற்றுக்கொண்ட பிறகு அவன் செயல் எதுவாயினும் சரி அன்பையே துணையாகக் கொண்டதாகுமேயன்றி வேறு வகையாயிருக்க முடியாது.

பெரியபுராணம் நமக்கு இவ்விடத்தில் உதவி புரிய முன் வருகிறது. தந்தையின் காலைத் துண்டித்தான். அதுவும் வேதியனாகிய தந்தையின் காலைத் துண்டித்தான் ஒரு சிறுவன். இவன் செய்த செயல் உலக நடைப்படி மாபெரும் பாதகம். ஆயினும் இவனுக்கு முத்தி அளித்தான் இறைவன். இறைவன் வழிபாட்டிற்காக எடுத்த மலரை முகர்ந்துவிட்டாள் ஒரு பெண்மணி உடனே ஒரு சிவனடியான் அவள் மூக்கை அறுத்துவிட்டான். அவள் அவ்வூரின் அரசி. அரசனுக்கு செய்தி எட்டியது. அவன் சீற்றம் கொண்டு வாளை உருவிக்கொண்டு ஓடோடி வந்தான். தன் பட்ட மகிஷியின் மூக்கைத்துணித்ததற்குக் காரணம் கேட்டான். சீற்றம் தணிந்தான். ஆனால் மூக்கைத்துண்டித்தவனின் மீது அவன் கோபம் இப்போது சென்றது. என்ன மடமை செய்தாய்? மலரை எத்த கையையுமல்லவா வெட்டியிருக்க வேண்டுமென்று கூறித் தன் வாளால் தன் மனைவியின் கரத்தையும் வெட்டிவிட்டான். இவ்விரு

செயல்களும் மறச்செயல்களே. அன்பையே துணையாகக் கொண்ட செயல்கள். திருக்குறளில் சொல்லப்பட்டுள்ள அன்பின் பொருளின் 'ஓங்கி ஆழ்ந்து அகன்ற' தன்மையை உணர்ந்தோரே மறம் யாதென் பதும், அது எந்தச்சந்தர்ப்பங்களில் அன்பையே துணையாகக் கொண்டவை என்பதையும் உணரமுடியும்.

இதை விட்டு விட்டுக் ''கள்ளாமை'' என்ற அதிகாரம் ஒன்றை இயற்றிய திருவள்ளுவரின் வாய்ச்செயலாகிய மறத்திற்கு எடுத்துக்காட்டாக தன் மனைவி மக்கள் பசியால் வருந்துவதைக் கண்டு மனம் நொந்து ஓரில்லத்திற்குள் நள்ளிரவில் புகுந்து திருடிய மறச்செயல் அன்பையே துணையாகக்கொண்டது என்று கொள்வது கூறுவது பொருந்தாது.

''ஈன்றாள் பசிக்காண்பான் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை''

என்றும்.

''ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல்''

என்றும் கூறிய திருவள்ளுவரின் ''மறத்திற்கும் அஃதே / அன்பே / துணை''

என்ற சொற்றொடருக்குப் பசிக்கொடுமையால் திருடினவனை எடுத்துக் காட்டாகக் கூறுவது எவ்வண்ணமும் பொருந்தாது.

16 ஆரங்கள் என்றேமே அவை கீழ்க்கண்டபடி

இது திரு. கோ. வன்மீகநாதன் அவர்கள் இயற்றிய கட்டுரை. இதனைத் திருக்குறள் ஒரு பொதுமறை என்னும் நூலின் 31 ஆம் பக்கத்தில் 16 ஆரங்களின் பட்டியலுக்குமுன் சேர்த்துக் கொள்ளவும்.

---



---

# இறக்குமதி

## தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

## 21. டௌவின் தோற்றங்கள்

(குறிப்பு:- இந்த அதிகாரம் 14 அதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களோடு சம்மந்தப்பட்டிக்கிறது. டௌவின் தோற்றங்கள் என்பதைச் சீன மொழியில் "டே" என்பார்கள். அதாவது டௌ வுருப்பெற்றது அல்லது ஒழுக்க நெறிகள் என்பது பொருள். நம்முடைய தமிழ்நாட்டின் சித்தாந்ததில் அருவம், உருவம், அருவ உருவம் என்று சொல்கின்ற மூன்று நிலைகளில் உருவத்தை ஒத்தது டெ என்பது என்று கூறலாம்.

மாபெரும் பண்பாட்டின் அறிகுறிகள் டௌவில் இருந்தே விளைகின்றன.

டௌ என்று சொல்லப்படும் (பரம்) பொருள் நம் கைக்கு அகப்படாததும் நாம் பிடிக்க முயலும் போதெல்லாம் நமக்கு ஆட்டம் காட்டி தப்பித்து விடுவதுமான தன்மைகளைக் கொண்டது.

நம்முடைய கைக்குப் பிடிபடாததாயும் நமக்கு ஆட்டம் காட்டி தப்பித்து விடுவதாயும் இருக்கலாம். ஆயினும் அதனுள் உருவங்கள் புதைந்து கிடங்கின்றன.

நம்முடைய கைக்குப்பிடிபடாததாயும் நமக்கு ஆட்டம் காட்டி தப்பித்து விடுவதாயும் இருக்கலாம். ஆயினும் அதில் தான் பொருள்கள் புதைந்து கிடக்கின்றன.

இருண்டதாயும் மங்கலாயும் இருப்பினும் அதில்தான் உயிர்ச் சக்தி புதைந்து கிடக்கின்றன.

உயிர்ச்சக்தி மிகவும் உண்மையாக இருப்பதால், டௌவினுக்குள் உயிர்ச்சக்தியினுடைய சான்றுகள் மறைந்து புதைந்து கிடக்கின்றன

பண்டை நாளிலிருந்து இன்று வரையில் தடதிவின் ஒரு நாமம் ஓர் உருவம் கொண்ட பொருள்கள் (வெளிப்படுவது) ஒயவில்லை. இவற்றின் மூலமாக நாம் எல்லாம் (தாவர சங்கமப்) பொருள்களின் அப்பனைக் காணலாம்.

எல்லாப் பொருள்களின் அப்பனின் உருவத்தை எப்படி நான் அறிவேன்? இவற்றின் மூலமாகத் தான்.

# விடையரங்கம்

**வினு :-**

'விதிப்படிதான் எல்லாம் நடக்கும்' என்ருல், கடவுளை வழிபடுவதன் இம்மைப்பயன் என்ன ?

—முத்து மெய்கண்டதேவன்.

**விடை :-**

திருமுருக. கிருபானந்தவாரியார்.

முதிர்தவராயினும்
முனிவராயினும்
மதியினராயினும்
மன்னராயினும்
பொதுவறு திருவொடு
பொலிபவராயினும்
விதியினை யாவரே
வெல்லும்நீர்மையார்,

இது கந்த புராணத் திருவிருத்தம்.

பிராரப்தம் - அநுபவித்தே தீர வேண்டும். இது இறைவன் வழங்கிய தீர்ப்பு.

இறைவனை வழிபடுவதனுல் இதன் வெப்பம்-வேகம் தணியும்.

சஞ்சிதவினை காலியாகும்.

''ஊழையும் உப்பக்கம் காண்பர்'' என்பது வள்ளுவர் வாதம்.

வேகமாக வரும் வினை சிறிது தணிந்து வரும்.

வழிபாட்டுக்குப் பயன் உண்டு, துன்பத்தின் வேகந்தணியும்.

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

''வினை நோய் போன்றது'' — என்று சிவஞான சித்தியார் சுபக்கம் 2-ம் சூத்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது. மேலும், 'வினையை அனுபவித்துத் தொலைப்பது தவிர, அதற்குவேறு மருந்தில்லை' என்பதும் அவ்விடத்தில் சொல்லப்பட்டது.

அவ்வாறு சொல்லப்பட்டதன் கருத்து 'வினை நோய் போன்றது- தீரா நோய்போன்றது' என்பதே யாகும். உலகில், 'தீரா நோய்கள்' என்று சில இருக்கின்றன. 'அவைகளுக்கு மருந்து இல்லை' என்றும் சொல்லப்படுகின்றது. ஆனுல், அவைகளுக்கும் மருந்து கொடுப்பதும், அதை வாங்கி உண்பதும் அன்றும், இன்றும் வழக்கத்தில் காணப்படுவதே.

'மருந்தில்லை' என்று சொல்வதும், மருந்து கொடுப்பதும் ஒன்றுக்கொன்று முரணல்லவாஎன்று கேட்கலாம். ஆனுல், இரண்டும் சரியே. 'மருந்தில்லை' என்பதற்குக் கருத்து, 'அந்த நோயை அடியோடு முற்றப் போக்கும் மருந்தில்லை' என்பதும், மருந்து கொடுப்பது, அந்த நோய் மிகுதியாக வாராதிருத்தற்கும், உள்ள நிலை

யிலும் பெரிதும் துன்புறுத்தாது ஓரளவில் தணிந்திருத்தற்கும் ஆகும். அதுபோலத்தான், 'வினையை அனுபவித்துத்தான் தொலைக்க வேண்டும்' என்பதற்குக் கருத்து 'வினை தன் பயனைக் கொடுத்தல்லது போகாது' என்பதும் வினை நீங்குதற்பொருட்டுக் கடவுளை வழிபடுதல். அந்தவினை மேலும் பல வினைகளைத் தந்து, பின்னும் பல பிறப்புக்களில் வந்து துன்புறுத்தாதிருத்தற்கும், இப் பிறப்பிலும் அந்த வினை, வன்மையாய் வந்து தாக்காமல், மேன்மையாய் நின்றுகழிதற்கும்ஆகும். ஆகவே, கடவுளை வழிபடுவதனால் இம்மையில் பயன் யாதுமில்லை என்று கருதவேண்டுவதில்லை. அப்படிக் கருதுதல் மேற்குறித்த நோய்களுக்கு மருத்துவர் வழி நின்று மருந்துண்ண மறுத்தலை ஒக்கும்.

இது பொதுவிதி; எல்லார்க்கும் உரியது. சிறப்பு விதி வேறுண்டு. அதனைக் கடைப்பிடித்தல் மிகச் சிலர்க்கே யன்றிப் பலர்க்கு இயலாது. அதுதான் காமிய பூஜை—பயன் கருதிச் செய்யும் வழிபாடு.

இறைவனைப் பயன்கருதாது வழிபடுதல் எளிது. குறித்த பயனைப் பெறவேண்டும் என்றால், அதற்கு நூல்களில் சொல்லப் பட்ட விதிகளை மிகவும் நியதியாகச் சிறிதும் வழுவில்லாமல் கடைபிடித்துச் செய்தல்வேண்டும். தவறினால் பயன்கிட்டாது. திருமால் தம் கண்ணையே பறித்துப் பூவாகச் சாத்தித்தான் சக்கரத்தைப் பெற்றார். இவ்வாறு செய்தல் பல காரணங்களால் பலர்க்கு இயலாது. இயன்றாலும் பயன் 'மலையைக் கல்லி எலியைப் பிடித்தான்' என்பதுபோலத்தான் ஆகும் அதுபற்றியே அப்பர் பெருமான் 'காமியம் செய்து காலம் கழியாதே' என்றார். ''தன்கடன் அடியேனையும் தாங்குதல்'' என்பதுதான் அவர் நெறி. ஆயினும், காமியத்தை வழுவின்றிச் செய்தால், வினை அடியோடும் நீங்கும்.

கி. வா. ஜகந்நாதன், M. A.,

விதி என்பது முற்பிறவியிற் செய்த வினையின் பயன்; அதையே ஊழ் என்று சொல்வார்கள். இந்தப் பிறவியில் நாம் இன்ப துன்பங்களை அனுபவிக்கிறோம். நன்மை தீமைகளைச் செய்கிறோம். அநுபவிக்கும் இன்பதுன்பங்களே விதியின் பயனாக உண்டாகும். செய்யும் செயல்கள் வேறு.

நாம் செய்யும் செயல்களின் பயன் மூன்றுவகையாக அமையும். உடனே பயன்தருபவை, சில காலம் கழித்து இந்தப் பிறவியிலே பயன்தருபவை, மறுபிறவிகளில் பயனைத் தருபவை என்பன அவை. முள்ளைக் குத்திக்கொள்கிறோம்; அதற்கு உடனே பயன் கிடைக்கிறது. ஒரு முரடனை அடிக்கிறோம்; உடனே அவன் நம்மை அடிக்கிறான். இதுவும் உடனே பயனைத்தருவது. ஒருவன் திருடுகிறான், அவன்

உடனே பிடிபடுவதில்லை சில காலம் கழித்து அவன் திருடியதைத் தெரிந்து கொண்ட காவலர் அவனுக்குத் தண்டனை கிடைக்கச் செய்கின்றனர். இது இரண்டாவது வகை.

மற்றவை பின்னைப் பிறவிகளில் பயன்தருபவை. ஆகவே நாம் செய்யும் செயல்களுக்கும் விதிக்கும் சம்பந்தம் இல்லை. பொல்லாதவன் சுகம் அனுபவிப்பதுண்டு. நல்லவன் துன்பப்படுவதுண்டு. இந்த இன்ப துன்ப நுகர்ச்சிகள் முன்னை வினையின் பலன்கள். இப்போது அவன் செய்வனவற்றின் விளைவுகள் பின்னே வரும் பிறவிகளில் உண்டாகும்.

கா. ம. வேங்கடராமையா

M. A. B OL

ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருட் கிளவி. இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைவதற்கேதுவாகிய நியதி ஊழ் எனப்படும். இவ்வணம் திருக்குறளுரையாசிரியராகிய பரிமேலழகர் கூறுவர். இருவினை தாமே சென்று செய்தவனை நுகரச் செய்ய மாட்டா; ஊட்டுவிக்க ஒருவன் வேண்டும். விதி ஒரு கருவியே. கருவியைச் செயல் படுத்த ஒருவன் வேண்டுவது போல, விதி அல்லது வினைப் பயனை நுகர்விக்க ஒருவன் வேண்டும். அவ்வொருவனே கடவுள். எனவே விதிப்படி நடத்துவிப்பவன் இறைவனே என்றுணர வேண்டும். அவ்விறைவன் அல்லது கடவுளை வழிபடுவதால் இம்மைப் பயன் என்ன என்பது நல்ல கேள்வி. இதற்கு விடை சுந்தரர் கூறுவர்: ''இம்மையே தரும் சோறும் கூறையும்; ஏத்தலாம்; இடர் கெடலுமாம்.''

க. வச்சிரவேல் முதலியார்

கடவுள் வழிபாடு செய்யற்பாலது என எல்லா உயர்ந்த நூல்களும் விதிக்கின்றன. பயன் உடன் கிடைக்கவில்லை எனின், அதற்குக் காரணம் வேறு யாதேனும் உண்டு என உணர்தல் வேண்டும் என்பதே வினைப்படி எல்லாம் நடக்கும் என்பதன் கருத்து. பின்வரும் பிரமாணங்கள் உண்மையை விளங்கும் என எண்ணுகிறேன்.

''சிவாய நம என்று சிந்தித்
திருப்போர்க்(கு)
அபாயம் ஒருநாளும் இல்லை —
உபாயம்
இதுவே மதியாகும்; அல்லாத
எல்லாம்
விதியே மதியாகி விடும்"
—நல்வழி

குறிப்பு:- உபாயம் இதுவே; மதியாகும். இருமுறை 'இதுவே' என்பதைக்கொண்டு கூட்டுக. இதனால், வினை நீக்கம் இறைவழிபாட்டால்தான் உண்டாகும் என்பது தெரிகின்றது.

'மண்ணில் நல்லவண்ண வாழலாம்'' என்னும் திருப்பாட்டும்,

திருச்செங்கோட்டில் அடியார்க்கு நளிர்சுரம் வந்தபோது அது நீங்குவதற்குத் திருஞானசம்பந்தர் பாடிச் சுரம் நீக்கியருளிய திருநீல கண்டப் பதிகமும் உடன் வைத்துக் கருதத்தக்கவை. இறைவனை வன்மையாக நம்புவோர்க்கு இறை வழிபாடும், அவன் திருவருளை மறவாமையும் எப்போதும் வேண்டற்பாலனவே. எப்போல் வாரும் இம்மையினும் உய்வது திருத்தொண்டின் உறைப்பாலே என்பதை உணர்த்திய ஆசிரியர் திருநாவுக்கரசர்என்பதை அப்பூதி அடிகள் உளங்கொண்டு சிந்தித்தார் என அறிகின்றோம்.

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,

,'தலைவிதிப்படிதான் எல்லாம் நடக்கும்'' என்பது பொதுவிதி. ஆயிரம் பொதுவிதிகள் சேர்ந்தாலும், ஒரு சிறப்பு விதிக்கு ஈடாகாது என்பது, நூலோர் கண்ட முறை. இறைவனின் அடியவர்களைப் பொறுத்த வரையில், தலைவிதி தன் ஆற்றலும் செயலும் இழந்து நிற்கும், "செந்திலோன் கால்பட்டு அழிந்தது இங்கு என் தலைமேல் அயன் கையெழுத்தே'' என்பது அருணகிரிநாதர் அருளிய கந்தர் அலங்காரம்.

''அல்லல் என்செய்யும்?
அருவினை என்செய்யும்?
தொல்லை வல்வினைத்
தொந்தந்தான் என்செய்யும்?
தில்லை மாநகர்ச் சிற்றம்பல
வனுர்க்கு
எல்லை யில்லைதோர்
அடிமைபூண் டேனுக்கே''

என்பது, திருநாவுக்கரசர் அருளிய திருக்குறுந்தொகை. அல்லல்-பிராரத்தம். அருவினை-ஆகாமியம். தொல்லை வல்வினைத் தொந்தம்-சஞ்சிதம். "பிராரத்தம், ஆகாமியம், சஞ்சிதம் ஆகிய வினைப்பயன்களை ஊட்டும் விதி என்பது. தில்லைச் சிற்றம்பலவனின் அடியார்களை ஏதும் செய்ய வல்லதன்று'' என்பது இதன் கருத்து. திருஞானசம்பந்தர் அருளிய திருக்கடைக்காப்புப் பாடல்கள் தோறும், அடியவர்களை "வாதியா வினை; மறுமைக்கும் இன்மைக்கும் வருத்தம் வந்து அடையாவே'' என்பது. மிகவும் வலியுறுத்தப் பெற்றிருத்தல் காணலாம். நமது குமரகுருபர சுவாமிகளும், திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பாவில், முருகனின் ஆறு திருமுகங்களில் ஒன்று, அடியார்களின்

"ஊழ்வினையை மாற்றி, உலவாத
பேரின்ப
வாழ்வுதரும் செய்ய மலர்முகம்''

ஆக விளங்குதலை விளக்கியிருத்தல் காணலாம். எனவே விதிப்படிதான் எல்லாம் நடக்கும் என்பதில்லை; இறைவனின் திருவருளைத் துணைக்கொண்டால், விதிவலியையும் மதிவலியால் வெல்லலாம். ''கூற்றங் குதித்தலும் கைகூடும் நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு". எத்தகைய கொடிய விதியும் ''ஆசறு நல்ல நல்ல; அடியாரவர்க்கு மிகவே'' விதி, சட்டம் (Law): இறைவன்

சட்டம் இயற்றுபவன் (Law giver). சட்டம் இயற்றுபவனுக்கு அதனை மாற்றும் உரிமையும், ஆற்றலும் உண்டு. அதன்படி இறைவன் தன் அடியவர்தமை ''ஊழ்வினை நலிய ஒட்டான்'', விதியை மாற்ற இயலாது என்பது, சமணர் கொள்கை. "சிறுகா பெருகா முறைபிறழ்ந்துவாரா"...என்பது நாலடியார் பாடல்.

கம்பன் அடிப்பொடி.

" இம்மைப் பயன் என்ன ?'' என்பதால் மறுமைப் பயன் உண்டென்பதை ஏற்றுக் கொள்ளுகிறீர்கள்; மகிழ்ச்சி.

எல்லாம் விதிப்படியே நடக்கும் என்பதை சாத்திர, அற, நீதி நூல்கள் யாவும் வலியுறுத்தும். விதியை - வினைப்பயனை – அனுபவித்தே ஆகவேண்டும். அதிலிருந்து தப்பித்துக் கொள்ள வேதம் முதலான அனைத்து நூலிலும் இடமில்லை என்றே அறவோர்கள் கூறுவர். ஆனல் கடவுளை வழிபடுவதால் விதியின் பிடியிலிருந்து மீளலாம்; மார்க்கண்டேயர் கதை அதற்குத் தக்கதொரு சான்று. இந்த உண்மையைப் பல நூல்களும் விளக்கிக் கூறும். அவ்வையார் அருளிய நல்வழியில் காணப்பெறும் ஒரு வெண்பாவை மட்டும் கண்டு ஐயம் அறலாம்; தெளிவு பெறலாம்.

'' 'சிவாயநம' என்று
சிந்தித்து இருப்போர்க்கு
அபாயம் ஒருநாளும்
இல்லை; — உபாயம்
இதுவே; மதியாகும்;
அல்லாத எல்லாம்
விதியே மதியாகிவிடும்.''

[' சிவாயநம ' என்ற ஐந்தெழுத்தை ஓதி அம்மந்திரத்திற்குரிய தெய்வத்தை முற்றும் நினைந்து, அதிலேயே ஒன்றி, உறுதியுடன் இருப்பார்க்கு ஒரு பொழுதும் ஆபத்துஉண்டாகாது; (வினைப்பயனை வெல்வதற்கு) இதுதான் தக்க தந்திரம்; வேதம் முதலிய நூல்கள் கூறும் வழிமுறையும் இஃதே! இஃதன்றி மற்றைய வழிகள் யாவும் ஊழ்வினையே தன் நெறியில் செல்லுமாறு செய்துவிடும்.]

மகாவித்துவான்
ச. தண்டபாணி தேசிகர்

சாமுசித்தராய் உலகுய்யத் தோன்றிய அப்பர்சுவாமிகளை, காளவாயில் இடப்பட்டபோது அவருடைய அரனடிப்பற்று அவரனுபவத்தை 'மூசுவண்டறை பொய்கையாக' மாற்றியது.

சுந்தரர் பெருமான் சூள் தப்பக் கண்ணிழந்தார். சிவகருணை பாடல்கேட்டுக் கண் தந்தது. படர்நோய் படர்ந்தது படரெலாந் தவிரப் பணித்தார். படர்நோய் நீங்கியது. இவ்வெடுத்துக் காட்டுக்கள் நாம் செய்யும் வழிபாட்டுறைப்பின் வன்மை மென்மைகட்டு ஏற்ப நம்வினைகள் வலிகுன்றுதலாகிய பயனை அளிப்பனவே என்பதை உணர்த்துவன.

இவைகளால் நாம் உணரத் தக்கது, பிராரத்தகன்கம் வழி பாட்டால் 'தலைக்குவந்தது தலைப் பாகையோடு போயிற்று' என்றாற் போலக் காட்டியாவது கழிக்கப் பெறும் என்பதே.

ஆகவே சிவஞானத்தால் சிவ னடியைச் சாராதே சார்ந்திருக்க, பாசி படு குட்டத்தில் கல் எறிந் தது போல ஆசுபடும் மலமாயை கன்மம் அனைத்தும் அரனடியை உணரும்போதகலும்; பின் அணுகும். சிவஞானியர் நிலையே இதுவாயின் எம்மனோர் வழிபாடு எமக்குள்ள உறைப்பின் அளவாக வன்மையை மென்மையாக்கி அரனடிக்கீழ் அகலாதே அணுகச் செய்யும் சாதனமேயாகும்.

நாம் வழிபாடு செய்யவும், தீதுவிலகவும் நன்மை விளையவும் செய்யுமாயின் அதுவும் நியதியின் கூறெனவே கொள்ளல் வேண்டு மேயன்றி தன்முயற்சி எனக்கருது தல் கூடாது.

M. கல்யாணம், நாகூர்

"காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க" என்பது திருவாசகத்தில் திருவண்டப்பகுதியில் வரும் ஒரு வாசகம்.

அதன்படி, "அன்போடு நேசிப் பவர்க்குக் வறுமைக் காலத்தில் உதவும் சேமநிதி போன்று உள்ள இறைவன் வாழ்க" — என்று மாணிக்கவாசகர் சொல்கிறார்.

எனவே இறைவனை வழிபடு வதன் மூலம் நமக்கு வரும் துன் பங்களை, நாம் சமாளிக்கக் கூடிய நல்ல சூழ்நிலையை நமக்கு இறை வன் அருள்வார்.

மேலும், நம்முடைய வாழ்வில் ஒவ்வொரு நிகழ்ச்சிகளும் விதிப் படிதான் நடக்கிறது என்றாலும் கடவுளை வழிபடுவதால், விதிப்படி நம் வாழ்க்கையில் ஏற்படும் இன்பங்களையும், துன்பங்களையும் ஒரே மாதிரி ஏற்றுக்கொள்ளக் கூடிய ஆற்றல் பெறுவோம். அதனால் வாழ்வு சீரும் சிறப்பும் பெற்று விளங்குவோம்.

கி. சத்தியநாராயணன்,

கோவை - 1.

விதிப்படிதான் எல்லாம் நடக் கும் ஆயினும் கடவுளை வழிபடு வதால் மனதிற்கு ஆறுதலும் விதியை ஏற்றுக் கொள்ளக் கூடிய மனோதிடமும், விதியை மதியால் வெல்லக் கூடிய ஆற்ற லும் இம்மையில் வாய்க்கிறது. மேலும் விதியை மாற்றப் படைத் தவனுக்கு உரிமையில்லையாயி னும் விதியைத் திருத்தப் பரம் பொருளாகிய ஈசனால் முடியும். எவ்வாறெனில் மார்க்கண்டே யருக்கு நான்முகன் 16 வயது ஆயுள் என எழுதினார். ஆனால் ஜோதி வடிவான அந்த ஈசன் மார்க்கண்டேயன் தன்மீது கொண்டுள்ள பக்திக்கும் அன்புக் கும் மனமிரங்கி அவரது விதி யைத்திருத்தத் திருவுளங்கொண் டார் — என்றும் 16 வயது ஆயுள் எனத் திருத்தினார். இதன் மூலம் நான்முகன் எழுதிய (விதியை) எழுத்தையும் மாற்றாமல் பக் தருக்கும் அருளினார். எனவே கடவுளை வழிபடுவதில் இம்மைப் பயன் பல உண்டு என விழை கிறேன்.

(வளரும்).

# களத்தூர் எது? - ஒரு கடிதம்

திருவாளர், 'ஸ்ரீ குமரகுருபரர்' இதழ் நிர்வாக ஆசிரியர் அவர்கட்கு,

களத்தூர் K. G. அருணசலம் எழுதிக்கொண்டது. 'ஸ்ரீ குமர குருபரர்' ஆனி இதழில் 19-ம் பக்கத்தில் "விடையரங்கம்" பகுதியில் என்னுடைய கூற்றுவ நாயனர்பற்றியவினவிற்கு விடை வந்துள்ளதைப் பார்த்தேன். எனக்குத் தெரிந்தசில செய்திகளை அடியில் குறிப்பிட்டுள்ளேன். களந்தை அந்தாதி பாடல் ஓலைச் சுவடி கிடைத்ததாலும், அடியிற் குறிப்பிட்டவாறும் 'களந்தை' என்பது நான் இருக்கும் களந்தை யேயாகும்.

சென்னையில் இவ்வூர்கல்வெட்டு குறிப்புகள் சில உள்ளன. (அவற்றின் நகலை இணைத்துள்ளேன்.) அங்கு விசாரித்ததில் முழு விபரமும் மைசூரில் இருப்பதாகத் தெரிந்தது. அவ்விடத்திற்கும் தெரிவித்துள்ளேன்.

## குறிப்புகள் :-

1. அச்சுதக் களப்பாளர் :- இவர் நடு நாட்டில் திருக்கடந்தை என்றும், திருப்பெண்ணுகடம் என்றும் கூறப்படும் திருத்தூங்கானை மாடத்திலிருந்த வேளாளர். சந்தான குரவர்களில் முதல்வராகிய மெய்கண்டாருக்குத் தந்தையார். இவர் தமிழ் நாட்டு மூவேந்தரையும் சிறையிலிட்டவர். இவர் ஒரு அரசராக இருக்கலாம் எனத் தெரிகிறது. இவ்வச்சுதக் களப்பாளர் சிதம்பரத்திலிருந்தவராக மூவேந்தர் செய்யுட்களால் தெரிகிறது. (தமிழ் நாவலர் சரிதை). இது சென்னை பச்சையப்பன் கலாசாலை தமிழாசிரியர் திரு. ஆ. சிங்காரவேலு முதலியார் அவர்களால் இயற்றப்பெற்று, அவர்தம் குமாரர் திரு. ஆ. சிவப்பிரகாச முதலியார் B. A., அவர்களால் இரண்டாம் பதிப்பாக வெளியிடப் பெற்றதான "அபிதானசிந்தாமணி" என்ற நூலின் 127 ஆம் பக்கத்தில் உள்ளது.

2. ஆதித்த சோழன் :- விஜயாலயன் குமரன். இவனுக்குக் கோவி ராஜகேசரி வர்மன், இராஜேந்திர சோழன் எனவும் பெயர்களுண்டு. இவன் கொங்கு நாட்டின் மேல் படை கொண்டு சென்று அவ்விடத்தரசனுயிருந்த பிரதிவிபதியின் குமரனுகிய சிவமாரனை வென்று, அந்நாட்டை வசப்படுத்தி, 'இராஜாதிராஜன்' எனப்பெயர்பெற்று உறையூரைத் தனது இராஜதானியாக்கினன், இவன் கோவிஜய நிருபதுங்கன்

மகளை மணந்து பல்லவதேசத்தை யும் உட்படுத்தினன். இவன் தில்லையில் பல திருப்பணிகள் செய்தவன். இவன் பாலாற்றங் கரையில் – களந்தையில் ' ஆதித் தேச்சுரம்'' என ஒரு சிவாலயங் கட்டுவித்தான். சுபன் எனும் செங்குந்தனைத் துணையாகக் கொண்டு ராஜாதிராஜ சோழன் பகைவனை ஈழ நாட்டரசனை வென்றான். இவனுடைய சமஸ் தானத்தில் ஒட்டக்கூத்தர் இருந்தாரென்றும், இவன் மகன் குலோத்துங்க சோழனுக்கு அவர் கல்வி பயிற்றுவித்தார் எனவும் தெரிகிறது.

'நால்வர்' பெருமக்கள் பாடி யுள்ளார்கள். அருகில் பல நாயன் மார்கள் வாழ்ந்துள்ளார்கள்.

ஆகையால் இந்தக்களந்தையில் கூற்றுவ நாயனாரும் இருந்திருக்க லாம் என்று, எனது கருத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

களத்தூர்
14—6—80

அன்புடன்,
K. G. அருணாசலம்,
மானேஜிங் டிரஸ்டி,
ஸ்ரீ தத்தீஸ்வரர் தேவஸ்தானம்,
களத்தூர், வ, ஆ. மாவட்டம்.

# திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

திருநாகேச்சரம், சேக்கிழாருக்குத் திருவடிஞானம் நல்கிய திருத்தலம்; ஆன்மார்த்த தலம்; அவரது திருப்பணி பெற்ற தலம். சம்பந்தசுவாமிகளும், அப்பரடிகளும் வழிபட்டுத் தேவாரப் பாமாலை சூட்டப்பெற்ற இத்திருத் தலத் திருக்கோயில் பல லட்சம் செலவில் திருப்பணிகள் செய்யப்பெற்றுக் கும்பாபிஷேகம் செய்விக்கப்பெறவுள்ளது.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ **காசிவாசி எஜமான் சுவாமிகள்** அவர்களைப் புரவலராகவும் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களைத் தலைவராகவும் கொண்ட திருப்பணிக்குழு அமைந்துள்ளது.

மெய்யன்பர்களின் காணிக்கைகள் வரவேற்கப் படுகின்றன.

அனுப்பவேண்டிய முகவரி:—

செயல் அலுவலர்,
ஸ்ரீ நாகநாத சுவாமி திருக்கோயில்,
திருநாகேச்வரம். (தஞ்சை மாவட்டம்.)

# இருபா இருபஃது

தெளிவுரை:

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

அறிவறியாமை யிரண்டு மடியேன்
செறிதலான் மெய்கண்டதேவே — யறிவோ
வறியேனே யாதென்று கூறுகேனுய்ந்து
குறிமாறு கொள்ளாமற் கூறு.

(தெ-ரை) மெய்கண்ட தேவனே! அடியேன் ஒருகால் அறிந்தும், ஒருகால் அறியாமலும் ஆக இவ்விருநிலையையும் கூடிவருகின்றேன். இந்நிலையில் அடியேனை அறிவுடைய பொருளெனக் கூறுவதா? அறிவற்ற பொருளென்று கூறுவதா? இதற்குரிய விடையை ஆய்ந்து அடியேன் மாறு கூறுவண்ணம் அறிவித்தருள்வாயாக என்பதாம்.

உயிர் அறிவுடையதோ அன்றோ என்பது கேட்கப்படும் வினவாகும். உயிர் தானாக எதனையும் அறியும் திறத்ததன்று. உணர்த்த உணரும் திறத்தது என்பதும் தான் சார்ந்த பொருளின் திறத்ததாய் அதனறிவு விளங்கும் என்பதும் அதற்குரிய விடையாகுப். குறி-நீ அருளும் குறிப்பிற்கு. அஃதாவது மறுமொழிக்கு. மாறுகூறுவகை-மேலும் ஐயமோ திரிபோ கொண்டு வினவாதவாறு. 'அறிவனேயமுதேயடி நாயினேன் அறிவனாகக் கொண்டோவெனை யாண்டது, அறிவிலாமையன் றேகண்ட தாண்டநாள், அறிவனேவல்ல னேவருளீசனே, எனவரும் திருவாக்கும் ஈண்டு நினைவு கூர்தற் குரியதாகும்.

4. கூறிய மூன்று மலத்தின் குணக்குறி
வேறு கிளக்கின் விகற்பம் கற்பம்
குரோத மோகம் கொலையஞர் மதநகை
விராய்எண் குணனும் ஆணவம்என விளம்பினை
அஞ்ஞா னம்பொய் அயர்வே மோகம்
பைசா சூநியம் மாச்சரி யம்பயம்
ஆயவேம் குணனும் மாயைக் கருளினை
இருத்தலும் கிடத்தலும் இருவினை இயற்றலும்

விடுத்தலும் பரநிந்தை மேவல்என் றெடுத்த
அறுவகைக் குணனும் கருமத் தருளினை
ஆங்கவை தானும் நீங்காது நின்று
தன்வழிச் செலுத்தித் தானே தானய்
என்வழி என்பதொன்று இன்றும் அன்ன
ஊரும் பேரும் உருவும் கொண்டுஎன்
ஊரும் பேரும் உருவும் கெடுத்த
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியில்
சைவ சிகாமணி மெய்யர் மெய்ய
மும்மலம் சடம்என மொழிந்தனை யம்ம
மாறுகோள் கூறல் போலும் தேறுஞ்
சடம்செயல் அதனைச் சார்ந்திடும் என்னே
கடம்படம் அதனுள் கண்டிலம் விடம்படும்
ஊன்திரள் போன்ற தாயின் தோன்றி
அணைந்தாங்கு அகறல் வேண்டும் குணங்களும்
பன்மையின் முகும் எம்மைவந் தணைதரத்
தானே மாட்டாது யானே செய்கிலன்
நீயோ செய்யாய் நின்மல னயிட்டு
இயல் பெனில் போகாது என்றும் மயல்கெடப்
பந்தம் வந்த வாறிங்கு
அந்தம் ஆதி யில்லாய் அருளே.

(தெ-ரை) ஞானத்தலைவ! தனக்கென ஓரிடமும், தனக்கென ஒரு பெயரும், தனக்கென ஒருவடிவும் இல்லாத நீர் அடியேனின் வினை கெடுத்தற்கென அம்மூன்றையும் உளவாக்கிக் கொண்டு எனக்கென ஓர் ஊரும் ஒருபெயரும் ஒருவடிவும் இல்லாதவாறு கெடுத்தருளி பெண்ணையாறு சூழப் பெற்ற திருவெண்ணெய் நல்லூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் சைவத்தின் முடிமணியே! மெய்யுணர்வு கைவரப் பெற்றுருக்கு, மெய்ப் பொருளாக விளங்கு பவனே! திருமுன்பிற்கு விண்ணப்பித்துக் கொள் வதைக்கேட்டருள் வாயாக.

கூறப் பெற்ற ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களின் குணங்களை வெவ்வேறாகக் கூறுமிடத்து யாதொரு செயலும் தன்னை யன்றி மற்றொருவரால் ஆற்ற இயலாது எனத் தன்னையே சிறப் பித்து நிற்பதும், யாதானும் ஒன்றைக் கற்பித்துக் கொண்டு அதன் கண்ணேயே அலைவுற்று நிற்பதும், அதுபற்றிச் சினங் கொண்டு நிற் பதும் காணும் பொருளில் வேட்கையுற்று நிற்பதும் உயிர்க் கொலை

செய்வதும் இடுக்கண் வந்துழிமனன் அழிதலும், சொல்லிலும் செயலிலும் தன்னைத் தானே தருக்கிக் கொண்டு நிற்பதும், இன்பத்துள் இன்பமுறுவதும் ஆய எண்குணங்களும், ஆணவத்தின் விளைவு என்றுளினை. அறியாமையால் தீங்கு இயற்றலும் பொய் மொழிதலும், மறத்தலும் ஒன்றிலேயே பற்றுக்கொண்டு மூர்ச்சித்தலும் அழுக்காறு செய்தலும், பிறர்க்குக் கேடு நினைதலும் அச்சப்படுதலும் ஆய ஏழு குணங்களும், மாயையின் விளைவு என்று அருளினை. ஒவ்வொரு இடம் பற்றி இருத்தலும், அவ்விடத்திலேயே கிடத்தலும் அறம் பாவங்களை இயற்றுதலும் உலகியல் பற்றுக்களை விடுத்தலும் பிறரை இகழ்தலும் ஆய ஆறு குணங்களும் வினையின் விளைவென அருளினை.

அவ்விடத்து மேற்கூறப்பட்ட இருபத்தொரு செயல்களும் என்னை விட்டு நீங்காது நின்று என்வழிச் செலவிடாது தம்வழிச் செலுத்தி நிற்கின்றன.

முப்பொருளையும் அடியேனுக்கு உணர்த்துமிடத்து மும்மலங்களும் அறிவற்றன என்று அருளினை, ஆனல் அவற்றின் விளைவு மேற்கூறியவாறு அல்லல் படுத்துவனவாயுள்ளன, அங்ஙனமாக அவை அறிவற்றன என்றல் மாறு கொளக் கூறல் போலுமே.

எனின் அற்றன்று! மும்மலங்கள் அறிவற்றன என்றல் உண்மையே! அவை அறிவுடைய நின்னைச் சார்தலின் தொழிற்பட்டன எனின் அறிவற்ற குடமும் ஆடையும், அறிவுடைய என்னிடத்துக் கூடுங்கால் அவை தொழிற்படவேண்டுமே! அவ்வாறு தொழிற்படாதது கண்கூடன்றே எனில் அறிவற்ற நஞ்சு உயிரொடு கூடிய உடலைச் சாருங்கால் அதன் விளைவைக்காட்டுவது போல மலங்களும் உயிரைச் சாருங்கால் அவற்றின் விளைவைக் காட்டுகின்றன எனில், அது உண்மையாயின் நஞ்சு தன் விளைவைக் காட்டிய பின் தானும் நீங்குதல் போல இம்மலங்களும் தம் விளைவைக் காட்டிய பின் தாமே அகன்று விடுதல் வேண்டும். அன்றியும் நஞ்சுக்கு அழித்தலன்றி வேறு பல குணங்கள் இலவாதல் போல இம்மலங்களுக்கும் பலகுணங்கள் இலவாதல் வேண்டும் மலங்கள் அறிவற்றனவாயின் அவை தாமே உயிரை வந்து பொருந்தா. அறிவுடைய யானும் தீங்கு தரும் அவற்றை வருவித்துக் கொள்ளமாட்டேன். வினையின் நீங்கி விளங்கிய அறிவினராகிய நீரும் அம்மலங்களை அடியேனிடத்துக் கூட்டுதற்கு இசையீர். அவை உயிர்க்கு இயல்பெனின் அவை

எக்காலத்தும் அழிவில்லாதனவாகும். இந்நிலையில் இவ்வையங்களின் நீங்கித் தெளியுமாறு அம்மலங்கள் அடியேனிடத்தும் பொருந்திய நிலையை விளக்கமாக அருளிச்செய வேண்டும் என்பதாம்.

மும்மலங்களும் உயிரொடு இயைந்தவாறு எங்ஙனம் என்பதே இப்பாடற்கண் கேட்கப்படும் பெருவினுவாகும். அவை அறிவுடையனவா அன்று என்பது இடையில் கேட்கப் பெற்றசிறு வினுவாகும். மலம் அறிவற்றவனே 'மலம் சடம் என்றல் காட்சி' என உண்மை நெறி விளக்கத்தும், 'மாயைதான் அசித்து' எனச் சிவப்பிரகாசத்தும், 'உலகத்திற்கோர் வித்துமாய், அசித்தாய்' எனச் சிவஞானசித்தியாரும் கூறுமாற்ருன் இவ்வுண்மை அறியப்படும். மும்மலங்களுள் ஆணவ மொன்றே உயிரொடு இணைந்திருப்பது. அம்மலம் தானே நினைந்து உயிரொடு கூடியதும் அன்று, இறைவன் கூட்டியதும் அன்று, உயிர் தானே எடுத்துக் கொண்டதுமன்று. உயிர் என்ருே அன்றே அது அதனெடு இணைந்திருப்பது. நெல்லிடத்து உமியும், செம்பினிடத்துக் களிம்பும் இயல்பாகவே இருத்தல் போல இதுவும் இயல்பிலேயே உயிரிடத்து இருப்பதாகும். நெல்லுக்கு உமியும் செம்பில் களிம்பும் இருத்தற்குக் காரணம் அறியப் படாதது போல இது உயிரிடத்து இருத்தற்கும் காரணம் அறியப் படாதாம். 'நெல்லிற்கு உமியும், நிகழ் செம்பினில்களிம்பும் சொல்லில் புதிதன்று தொன்மையே – வல்லி, மலகன்மம் அன்றுளவாம் வள்ளலவான் பொன்வாள், அலர்சோகம் செய் கமலத்தாய்' எனவரும் சிவஞான போதத்தால் இவ்வுண்மை அறியப்படும். உயிர் மேற்கூறிய மலப்பிணிப்பினின்றும் நீங்குதற்காகக் கொடுக்கப் பட்ட உடல் உலகு முதலியன மாயையாகும், அதனெடு கூட்டப் பெற்ற உயிர் மேலும் ஈட்டிக் கொள்ளும் அறமும் பாவமும் கன்மங்களாகும். எனவே முதற்கண் கூறிய ஆணவ மலத்தினின்றும் உயிர் நீங்கவே பிற்கூறிய இரண்டும் உயிரொடு பொருந்தினவாம். அடுத்து உயிரிடத்து மலம் பொருந்தி நிற்பது இயல்பெனின் அது என்றும் போகாதன்ருே என வினு எழும். ஆம். உயிரிடத்து ஆணவ மலம் முத்தி நிலையிலும் நீங்குவதில்லை. ஆனல் உயிர் உடலோடு கூடிய கட்டுநிலையில் இம்மலம் தன் விளைவைச் செய்தல் போல விட்டு நிலையில் செய்வதில்லை, வறுத்த வித்தெனச் செயலற்று நிற்கும். முத்திதனின் 'மூன்று முதலும் மொழியக்கேள் சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு — மெத்தவே. இன்பங்கொடுத்தல் இறை இத்தைவிளை வித்தல்மலம், அன்புடனே கண்டு கொள் அப்பா' எனவரும் உண்மை விளக்கத்தால் இவ்வுண்மை அறியப்படும்,

விகற்பம் - வேறுபடுத்தல். கற்பம் - கற்பித்துக்கொள்ளல். குரோதம் - சினம். மோகம் - ஆசை. அஞர் - துன்பம்; துன்பத்திற்குத் துன்பப்படுதல். மதம் - செருக்கு. நகை - மகிழ்ச்சி; இன்பத்திற்கு இன்பப்படுதல். இன்பத்துள் இன்பம் விழையாதும், துன்பத்துள் துன்பமுருதும் இருத்தல் அறிவுடைமையாம். அதற்குமாருக இருத்தலே ஈண்டு அஞர் என்றும், நகை என்றும் கூறப்பெற்றன. அஞ்ஞானம் - அறியாமை: நில்லாதவற்றை நிலையென்றுணரும் புல்லறிவு, அயர்வு - மறதி. மோகம் - விரும்பிய பொருளை இழப்பினும் விரும்பாத பொருள் வந்துறினும் அதற்காக மூர்ச்சித்து வருத்துதல். மோகம் இரண்டனுள் முன்னையது ஆசைப்படுதல் என்னும் பொருளது. பின்னையது அவலித்தல் என்னும் பொருளது. பைசாசம் - கண்ட பொருளைப் பற்றுதல். சூன்யம் - கேடு விளைத்தல். மார்ச்சரியம் - அச்சம். பரநிந்தை- பிறரை இகழ்தல். ஊரும் பேரும் உருவும் கெடுத்தலாவது பிறவியறுத்தலாம். அம்ம - கேட்டருள்வாயாக! அம்ம - கேட்பிக்கும் என்னும் தொல்காப்பியம். கடம் - குடம் படம் - ஆடை. ஆயிட்டு - ஆதலால்; காரணப் பொருட்டு ஆகலான் என்பது ஆய்எனத் திரிந்து நின்றது. மழை பெய்து குளம் நிறைந்தது என்புழிப்போல் என்க. நெஞ்சம் பிளந்திட்டு என்புழிப் போல இட்டு என்பது பகுதிப் பொருள்விகுதி. ஆகலான் என்பதற்கு ஆயிட்டு என்பது அக்காலவழக் கென்றலும் ஒன்று. அற்றுகலினன்றே 'நீயோ செய்யாய் நின்மலனு லிட்டு' பேருரை கூறுவதும் காண்க.

ரு. அருள் முன்பு நில்லாது அடியேற்குக் கண்ணின்று
இருள் கண்ட வாறுஎன் கொல் எந்தாய் — மருள்கொண்ட
மாலையா வெண்ணெய்வாழ் மன்னவா என்னுடைய
மாலையாம் மாற்ற மதி.

(தெ-ரை) எமது தந்தையே! அடியேற்கு தலைமையாய் உள்ளவனே! மருள் என்னும் பண்ணினை வண்டுகள் இருந்து பாடுதற்கு உரிய மாலையை உடையவனே! திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளி யிருக்கும் ஞானப் பேரரசனே! முற்கூறிய மலங்கள் அறிவற்றன வாதலின் நுமது திரு முன்னிலையில் நிற்றற்கில்லை. அடியேனும் தன் வயமற்றவனுதலின் தானுகக் காண்டற்கு அறிவற்றவனுய் உள்ளேன் இந்நிலையில் அம்மலங்களை அடியேன் காணுமாறு எங்ஙனம்? அடியேனுக்கு உண்டாய இவ்வறியாமையை நீக்கியருள்வாயாக என்பதாம்.

தத்துவச் சிறுகதை

# ஏதாவது பேசுங்கள்

— 'கண்ணபிரான்' —

குருநாதரே, கண் விழித்து என்னைப் பாருங்கள். என்னுடன் பேசுங்கள். நான் தங்களுக்காகவே அன்ன ஆகாரமின்றி போக்கிடம் இன்றி தவம் கிடக்கின்றேனே.

தயவு செய்யுங்கள்.

ஏனிந்த மௌனம். ஏனிந்தப் பாராமுகம். ஏனிந்த அலட்சியம்.

குருநாதரே.

அன்றொரு நாள் சில வருடங்களுக்கு முன்பு தாங்களாகவே என்னை வந்தடைந்து என் குரு என்றீர்கள். நானும் ஏற்றுக் கொண்டேன். அன்று முதல் நான் தங்களையலாது எங்கும் போவதில்லை. உண்பதில்லை. உறங்குவதில்லை.

ஞாபகமிருக்கிறதா உங்களுக்கு.

அன்றொரு நாள் நான் ஆற்று நீரில் ஆனந்தமாக நீராடிக் கொண்டிருந்தேன். உடம்பெல்லாம் கசக்கித் தேய்த்துக்கொண்டிருந்தேன். வாய் வாயாகக் கொப்பளித்துக் கொண்டிருந்தேன்.

திடீரென வெடிச் சிரிப்பு. திரும்பினேன்.

நீங்கள் தான். அடங்காமல் சிரித்துக் கொண்டிருந்தீர்கள்.

ஏன் சிரிப்பு என்றேன்.

அழுக்கெல்லாம் போய்விட்டதா என்றீர்கள்.

நான் திகைத்தேன். பிரமித்தேன், கரையேறி விட்டேன்,

பின்பு நான் குளிக்கவே யில்லை.

இன்னோர்நாள். ஒரு வீட்டில் முழு மனதோடு அறுசுவை உண்டியை அள்ளிஅள்ளிப் போட்டு உண்டபின் பேச்சுத் திணறி திண்ணையில் உருண்டு கிடந்தேன். தாங்கள் இளஞ்சிரிப்பு சிரித்தீர்கள். தாங்கள் சிரித்தாலே எனக்கு திடுக்கிட்டுவிடும். திடுக்கிட்டேன்.

விஷயம் யாது குருநாதரே என்றேன்.

உண்டது நீயா? வயிறு? என்று கேட்டீர்கள்.

அப்படியே வாயில் விரலைவிட்டு வெளியேற்றினேன்.

பின்பு ஒவ்வொரு வேளையும் ஒரே கவளம்தான் உண்டேன்.

ஐயா பெரியவரே.

இன்னும் ஞாபகமூட்டுகிறேன்.

பின்பொருநாள்.

ஒரு கழைக்கூத்தாடி விளையாட்டுக் காட்டிக்கொண்டிருந்தான். உடம்பை ரப்பர் மாதிரி வளைத்து வளைத்து வேடிக்கைகள், வளையத்திற்குள் புகுந்து வந்து வேடிக்கை, முன்னும் பின்னும் தாவித்தாவி குதித்து வேடிக்கை, இடுப்பை வளைத்து வேடிக்கை, கயிற்றின்மேல் நடந்து வேடிக்கை.

பார்த்துக் கொண்டேயிருந்த நான் திடுமென தங்களைப் பார்க்க தாங்கள் என்னை விஷமமாகப் புன்னகையுடன் பார்த்தீர்கள்.

இப்பால் வந்து என்ன என்பது போல் மௌனமாக வினவினேன்.

ஆடியது யார்? என்று கேட்டீர்கள்.

பின்பு தாங்களே இந்த ஆட்டம் போதுமா என்று கேட்டீர்கள்.

அது முதல் நான் எதையும் யாரையும் அதிகமாகப் பார்ப்பதே யில்லை.

குருநாதரே..

சிலதினங்களுக்கு முன்பு...

ஓர் அழகான கன்னிப்பெண்; வனப்பான பெண்; குளிர்ச்சியான பெண் அன்ன நடைநடந்து ஒயிலாக மாலை நேரத்தில் இளந் தென்றலில் மேலாடை பறக்க நடந்து கொண்டிருந்தபோது...

நான் பார்த்தேன். ரசித்துப் பார்த்தேன்.

திரும்பினேன். தாங்கள் என்னைப் பார்த்த பார்வை......

இந்த முறை நானே வினவினேன் தங்களிடம்.

''பார்த்து ரசித்தது நானா? அவரா?" என்று.

தாங்கள் ஏன் அப்படி திகைத்தீர்கள். பிரமித்தீர்கள்.

நான் பயந்து விட்டேன்.

ஓ ... அதுமுதல் தாங்கள் என்னைப் பார்ப்பதே இல்லை. என்னிடம் பேசுவதே யில்லை.

பாராமுகமாய் இருக்கிறீர்கள்;

குருநாதரே!

ஏதாவது பேசுங்கள்,

கேளுங்கள். என்னைத்திட்டுங்கள்.

ஆ...... என்னைவிட்டுப் போய்க் கொண்டிருக்கிறீர்களே.

கு...ரு...நா...த...ரே......

அந்த மனிதன் வந்த வழியே பழைய அடிச்சுவட்டில் திரும்பிக் கொண்டிருந்தான்.



## உங்கள் ஜன்ம நட்சத்திரம் என்று வருகிறது?

உங்கள் ஜன்ம நட்சத்திரம்வரும் நாளில் ஆண்டுதோறும்-உங்கள் பெயரில் ஒரு புண்ணியகாரியம் நடைபெறவேண்டும். உங்கள் பெயர், முகவரி, பிறந்த மாதம் - (தமிழில்), நட்சத்திரம் ஆகிய குறிப்புக்களுடன் ரூ 110-க்கான காசோலையும் அனுப்புங்கள். ஆண்டுதோறும், அந்தமாதம் அந்தநாளில் தஞ்சை மாவட்டம் கதிராமங்கலம் ஸ்ரீ வன துர்க்காபரமேஸ்வரிக்கு அபிஷேக அர்ச்சனை செய்து பிரசாதம் உங்கள் முகவரிக்கு அனுப்பப்பெறும். உங்களுக்கும் ஒரு முக்கியமான கடமையுண்டு. உங்கள் முகவரி மாற்றங்களை (மாற்றங்கள் இருந்தால்) அவ்வப்போது தெரிவிக்க வேண்டும். இந்தத் திட்டத்தில் நீங்கள் பங்குகொள்ள விரும்பும் விருப்பத்தின் வேகம் உங்கள் அதிர்ஷ்டத்தின் வேகத்தைப்பொறுத்தது. தொகையும் விவரங்களும் அனுப்பவேண்டிய முகவரி:-

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்,
அதிபர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். 612 504.

# களந்தை தத்திசுரர் பதிற்றுப் பத்தந்தாதி.

## காப்பு

பூவார் கொன்றைச் சுகலிங்கப் புனிதன் களந்தைப் பதிமீதிற்
பாவாற் புகழ் வளர்பதிற்றுப்பத்தந் தாதி பகர்ந்திடவே
தேவாய்த் தெய்வ வாரணமாய் சிறுதாட் பூத வுடுச்காட்டு
மூவா முதன்மைக் கணபதிமா முகனைத் துதித்து வணங்குவாம்.

## நூல்

கங்கைச் சடையும் திருமுகமும் கண்கள் மூன்றுங் கறைகாளமும்
மங்கைக் கொடுபங் களித்த எழில் வடிவு மழுமான் கரதலமும்
கொங்கைப் பொருவு மலர்ப் பதமும் கும்பிட்டேத்திக் குழைந்தாடி
அங்கை கொடுமா மலர்தூவ அளித்தான் களந்தைச் சுகநாதன். 1

நாதங் கடந்த பரவெளியின் நாப்ப ணிருந்து மெஞ்ஞானப்
போதங் கடந்த பெரியோர்கள் உள்ளத் திருக்கும் புகழொளியான்
ஏதங் கடந்த களந்தைநகர் இருக்கும் எழில்சேர் சுகலிங்கன்
பாதங் கடந்த சுகமளித்தான் அடியேன் செய்யும் பரிசெதுவே. 2

பரிசு தெரியாப் பாழ்நெஞ்சே பாவஞ் செய்தாய் பலகாலுந்
துரிச தகற்றுந் தென்களந்தைத் தோன்றுத் துணையஞ் சுகலிங்கன்
அரிய பொற்று மரைப்பதத்துக் கன்பு செய்தே அவனடியார்
பெரிய குழாத்திற் சென்றக்காற் பெறும் பேறிதனின் மற்றிலையே. 3

மற்று தரவா ரெமக்கினிமேல் வானோர்க் கரசே மழவிடையிற்
கற்றூர் பரவ எழுந்தருளுங் களந்தைப் பதிவாய் சுகலிங்கா
அற்றூர் தமக்கும் அலர்ந்தார்க்கும் அருள்வா னமைந்த படியலவோ
முற்று முலையா ளழகுமையாள் முதல்வா மூவா முழுமுதலே. 4

முதலுங் கடைவு நடுவுமில்லா முத்தா முத்தி தரவல்ல
பதமும் பாதா லத்துறையும் பவளவேணி முக டணவும்
குதலை மொழிச்செங் கனித்துவர்வாய் கோதை பங்கா களந்தை நகர்
நிதமுங் குடியாஞ் சுகலிங்கா நின்னைத் துதிப்ப தெவ்வாறே. 5

எவ்வா றடியேன் மடவார்கள் இழைக்குங் கொடுமை அகற்றுவது
எவ்வா றடியேன் பிறப்பிறப்பாங் கடல்நின் றேறி இருப்பதுவும்
எவ்வா றடியேன் களந்தைநகர் எய்தி நின்னைக் காண்பதுவும்
எவ்வா றடியேன் சுகநாதா என்று கொள்வை அறியேனே. 6

அறியே னுன்றன் அடியாரை அறிந்து கொண்டிங் கவரோடுங்
குறியே னுன்றன் திருநாமம் கூறே னுன்றன் எழுத்தஞ்சும்
வெளியேன் செய்த பாவமெல்லாம் விட்டுக் கொள்ளும் வகை
யறியாச்
சிறியேன் களந்தைச் சுகலிங்கா செய்யும் வண்ணம் அருள்வாயே. 7

அருளும் அறிவின் பெரும்பயனும் அந்தப் பயனை அனுபவிக்கும்
பொருளு மான தென்களந்தைப் புனிதா மறைமுழுதும்
அருளும் பெருமை அடியார்கை வளரா மலகக் கனிபோலத்
தெருளும் படிக்கு நின்றசுக நாதா கருணைத் தேசிகனே. 8

தேசார் பூதி சாதனமாந் திருவே டத்தைப் பூண்டுசிவ
பூசா விதியுந் தெரிந்துணர்ந்தோர் புத்தி யிருக்குந் தென்களந்தை
வாசா தீதி வழகுமையாள் மங்கை மணக்குத் தத்தைலிங்கா
ஈசா வென்னை யாண்டு கொள்ள யினித்தானெடுப்பாள் யார்
சொல்லே. 9

சொல்லும் பொருளு மாயிருந்துஞ் சூடு மனலு மாய்ப்பொலிந்து
எல்லுங் கதிரு மாயிருந்தே எள்ளும் நெய்யும் போலிருந்து
நெல்லும் கரும்பும் பிரிவறியா வயலார் களந்தை நீள்தசரிற்
புல்லும் பெருமான் சுகலிங்கன் பொய்யா ளவர்க்குப் பொய்யனே. 10

ஆன்மிசை அமர்ந்த முனிவர ரமரர் அரகர எனத்தொழு தேத்த
நான்முகன் முதலாய் மாலவன் வணங்க நண்ணிமெய் யரசுவீற்
றிருக்குங்
கோன்எனுங் களந்தைச் சுகலிங்க னெனது குடிமுழு தாண்டமை
யதனுல்
யான்இனிப் பிறவேன் பிறக்கினு மவனை யன்றியா னறிவது
மிலேயே. 11

இலைகொள்முக் குடுமிப் படையினை ஏந்தும் எம்பெரு மான்பெருங்
களந்தை
நிலைமைக் குயர்ந்த நிராமயன் எங்கும் நிறைபரி பூரணன் கங்கை
தலைமிசைக் கொண்ட சுகலிங்க நாதன் தத்துவா தீதன்பொன் மேரு
மலையினை வில்லா வளைத்தது போலென் மனத்தையும் மேல்வளைத்
தானே. 12

வளைக்கையர் மடவார் மயக்கினிற் பட்டு மதிதடு மாறிநெஞ் சகமும்
இளைக்கவென் தரமோ எனைத்தடுத் தாண்டால் எப்பிழை உறுவதோ
ஐயா
துளைக்கைமால் யானைத் தோலுடை புனைந்து தொடுகடல் விட
முண்டு ஞானம்
விளைக்குமா களந்தைப் பதிச்சுக நாதா வெண்ணிலா முடித்தவே
ணியனே. 13

வேணிகள் புனைந்து தபோவனம் புகுந்து விரதமே பிடித்தங் கையிற்
பாணியு நுகர்ந்து பசிபொறுத்துழலும் படிவர்கா ளுய்வகை பகர்வன்
வாணிபொன் மடந்தை இருவருங் கலந்து மனைதொடு மகிழ்கொளுங்
களந்தை
காணியாய்க் கொண்ட சுகலிங்கன் பாதங் கருதுவீர் தருவன்நற்
கதியே. 14

கதியினை யளிக்குங் கல்வியை அளிக்குங் கற்றவ ரோடுடன் இருக்கும்
மதியினை அளிக்கும் மாலுறு நெஞ்சே மதுகர முரல்பொழிற் களந்தை
விதியினை யளிக்கும் மால்தொழு தேத்த விளங்குடுட் சுகலிங்கன்
பாதம்
பதியினை யளிக்கும் பசுத்துவம் நீக்கும் பாசத்தை யகற்றுமா
பணியே. 15

டணிமுடி என்றும் தீவிழி என்றும் பனுவல்கள் உரைக்குநா வென்றும்
மணிநிறம் பொருந்து களமென்றும் முன்னூல் மார்பென்றும்
மலர்ப்பத மென்றும்
அணிதிகழ் களந்தைச் சுகலிங்கன் றன்னை அறிபவர் உளர்கொலோ
நாளுந்
துணிபொருள் மறையு மறிவதற் கரிய தொல்லையோன் தொல்லை
யோன் றுனே. 16

தான்முத லுதித்துச் சராசரம் புரந்து சர்வசங் காரமுஞ் செய்து
வான்முத லீரேழ் உலகமு மறைத்து மற்றனுக் கிரகமும் புரிந்து
மான்முத லமரர் வணங்கவீற் றிருந்து மகிழ்பெறுங் களந்தையெங்
குடிக்கோர்
கோன்முத லென்னுஞ் சுகலிங்க நாதன் கூத்துநின் றுடுவான்
மாதோ. 17

மாதரை மக்கட் குழாங்களைக் கண்டு மயங்கிடு நெஞ்சமே கேள்நீ
மாதரைப் புகழு கொடிமதிற் களந்தை வளர்சவுந் தரவல்லி யென்னு
மாதரை யாள வொருபுர மிருக்கு மதிதவழ் சடைமுடி யோடு
மாதரை முகங்கொள் சுகலிங்கன் தாளை வழுத்தியுன் பிறவிநோய்
அகற்றே 18

அகத்தினி லொன்றும் புறத்தினி லொன்றும் அடக்கிமெய்
அன்புளார் போல
முகத்தினி லொன்று மொழிந்திடு மாந்தர் முயக்கெனு மயக்ககற்
றுவனே
சகத்தினி லொன்றும் பற்றுவிட் டுனது சரணத்தை நினைத்தசின்
மையர்கள்
இகத்துமெய்ப் பரத்தும் வாழச்செய் களந்தைஇருந்திடு சுகலிங்கப்
பொருளே. 19

பொருளள வினுக்குப் போகவிற் றெழுகும் பொதுவிலை
மடந்தையர் கடைக்கண்
மருளினுக் கிரங்கி யவலனுய்த் திரியும் வஞ்சனைக் காப்பதென்
னுளோ
உருள்பெருந் தேர்கள் உலவு பொன்வீதி உயர்தவக் களந்தைமா
நகரில்
வருசுக லிங்க சவுந்தர வல்லி மணங்குடி கொண்டவா னவனே. 20

அவனு வந்தது வெள்விடை யாடையும் அம்பிலித் தோலராப்
பூணே
அவனு வந்தது மன்றிலி லருநட மாடல்நஞ் சமுதூணே
அவனு வந்தது சவுந்தர வல்லித னணிமணஞ் சுகலிங்கன்
அவனு வந்தது கருணையா லெளியனை ஆட்கொள அறிநெஞ்சே. 21

நெஞ்ச முன்பத நினைக்கவுங் கண்ணிணை நிரந்தரங் கண்டுகண் டுருகி
எஞ்ச லின்றிநின் புகழ்செவி கேட்கவு மினியதோர் நாவுனைத்
துதித்து
வஞ்ச மின்றியே களந்தையம் பதியினில் வதியவுஞ் சுகநாதா
விஞ்சை மந்திரம் அருள்புரிந் திடவுநான் வேண்டினன் வேண்டிய
திதுவே. 22

இதுவுமுன் செய்த தவப்பய னென்றுகொண் டிரங்கலை மடநெஞ்சே
சதுமு கன்பெருந் தாதையு மறிகிலாத் தாள்கள்மண் ணிடை
தோயப்
புதுமென் மாளிகை சூழ்திருக் களந்தையிற் புண்ணிய லிங்கமாய்
நின்றுன்
கதுமெ னச்சென்று சன்னிதி காணவே கருதிய களிப்பாலே. 23

களிப்ப தென்னைநீ இவ்வுலகத்தினைக் கானலை நீரென்று
குளிப்ப தென்னைநீ நரகிடை யுன்னுடன் கூடுதல் வாழ்வாமோ
தளிக்குஞ் சோலைசூழ் களந்தையிற் சுகலிங்கன் தருங்கதிக் கூறைகூவி
விளித்து நின்றன னஃதுநீ யுணர்ந்திலாய வீணினுள் கழித்தனை
மனனே. 24

# சைவ நற்சிந்தனை

பெ. திருஞானசம்பந்தம், எம். ஏ., எல். டி.,

சைவம் பாரதநாட்டில் மட்டுமின்றி கடல் கடந்தும் தொன்று தொட்டு பயிலப்பட்டு வருகிறது. இன்று கன்னட நாட்டிலும் காச்மீர நாட்டிலும் கன்னித் தமிழ் நாட்டிலும், வீரசைவம், காச்மீர சைவம், சித்தாந்த சைவம் என்ற பெயர்களில் சைவம் வழங்கி வருகிறது. தொல்காப்பியர் காலத்தில் பெரியோனுகிய சிவனுக்குக் கோயில் எடுக்கப்பட்டது. சங்க காலத்தில் ஆலமர்செல்வன், மாதொருபாகன், முப்புரம் எரித்த முதல்வன் போற்றப்பட்டுள்ளான். ஆறும் நூற்றுண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் திருமூலர் வேதாகமங்களை ஆதாரமாகக்கொண்ட சைவ சித்தாந்தத்தை நமக்கும் காட்டுகிறுர். களப்பியர் ஆட்சியில் மறைந்து வாழ்ந்த சைவம் ஞானசம்பந்தர், அப்பர் ஆகிய இரு சைவக்கண்களைக்கொண்டு புத்தொளிபெற்று விளங்குவதாயிற்று. அவர்களின் திருப்பதிகங்களிலும்அவர்களுக்கு முன்னும் பின்னும் வாழ்ந்த காரைக்காலம்மையார், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்றோரின் திருப்பதிகங்களிலும் சைவசித்தாந்தக் கருத்துக்கள் மலிந்து கிடக்கின்றன.

'வேதாந்த சித்தாந்தம்' என்று திருமூலரால் குறிப்பிடப்பட்ட சைவத்தைப் பல்லவர், சோழர் குலத்து மன்னர்கள் போற்றி வளர்த்திருக்கிறுர்கள். இவ்விரு குலமன்னர்களும், ஆரியம், தமிழ் இரண்டையும் போற்றி வந்திருக்கிறுர்கள். உலகிலேயே தொன்மையும் இலக்கிய வளமும் கொண்ட இருமொழிகள் இவையே தெய்வமணம் மிகுதியாகக் கொண்ட மொழிகளும் இவையே. பல்லவர்கள் குறிப்பாக சமஸ்கிருத வளர்ச்சிக்குப் பேராதரவு தந்தார்கள். சோழமன்னர்கள் வேதம் ஓதுவதற்கும் தமிழ்த் திருப்பதிகங்கள் ஓதுவதற்கும் நிபந்தங்கள் ஏற்படுத்தினுர்கள். வேந்தர்களன்றி ஊர் மக்களும் இவ்வகையில் பங்குபெற்றுள்ளார்கள். விருத்தாசலத்தில் திருப்பதிகம் ஓதுவதற்கு நெற்குப்பையில் வாழ்ந்த மக்கள் வழிவகை செய்துள்ளது முதலாம் இராசராசன் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. 'சைவ சித்தாந்த மார்க்கத்தை அறிந்தவன்' என்று தன்னைப் பெருமையுடன் அறிமுகப்படுத்திக்கொள்கிறுன். பல்லவ வேந்தனுன இராஜசிம்மன் ஐயடிகள் காடவர்கோன், சேரமான்

பெருமான் போன்ற அரசர்கள் தெய்வப் பாடல்களைப் பாடியும் தெய்வீக வாழ்வு வாழ்ந்தும் வந்திருக்கிறார்கள். மன்னராட்சி யின்றி மக்களாட்சி நடைபெறும் இந்நாளில் மடங்களும் மக்கள் மன்றங்களுமே சிவம் பெருக்கும் பணியை மேற்கொள்ள வேண்டிய வைகளாக இருக்கின்றன.

சைவசமயிகள் மூல நூல்களா கக் கொள்பவை நால் வேதமும் இருபத்தெட்டுச் சிவாகமங்களும், பதினான்கு சித்தாந்த சாத்திரங் களும், பன்னிரு திருமுறைகளு மாம். வேதமோடாகம்மெய்யாம் இறைவன் நூல்' சித்தாந்த வேதாந்தம் காட்டும் சிவனையே என்னும் திருமூலர் கூற்று இரண் டையும் ஒத்த நிலையில் வைத்துப் போற்றும் பண்பினைக் காட்டு கிறது. எப்படி இவை இரண்டும் சிவபெருமானால் வெளியிடப் பட்டதால் பிரமாண நூல்களாக ஆகிற்றனவோ அப்படியே சிவானுபவம் வாய்க்கப்பெற்ற ஆசாரியர்களால் அருளிச் செய் யப் பட்ட திருமுறைகளும் சித் தாந்த சாத்திரங்களும் பிரமாண நூல்களே.

'திருமுறை' என்ற சொல் மூன் றாம் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டில் காணப்படுகிறது. திரு என்னும் சொல் செல்வன் கழல் ஏத்தும் செல்வத்தையும் குறிக்கும். திருவே என்செல்வமே என்று அடியாரால்போற்றப்படும் சிவபெருமானையும் குறிக்கும். திருமுறை நமக்குக் கிடைத்துள்ள அரிய செல்வம் அதைப்போற்றும் வகையில் விழா எடுக்கும் பழம் மரபை யொட்டி இங்குப் விழா எடுக்கிறோம். விழா எடுப்பதோடு அமையாது தினந்தோறும் திரு முறையை ஓதிவந்தால், சார்ந்த தன் வண்ணமாகும் நமது உயிர் சிவசம்பந்தத்தை இடையறாது பெற்று சிவாயுச்சிய நிலையை அடைய இயலும்.

சிவன், சீவன், தளை என்ற முப் பெரும் உண்மைப் பொருள்களில் முதலாவதாக நிற்பது சிவன் அவன் புகழைப்பேச முயன்ற வேதமும் தோல்வியுற்றது. மனத் தாலும் எண்ணிப்பார்க்கவியலாத அருமை பெருமைகளை உடைய வன். இதைத்தான் வேதம் 'யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா துஹ என்று கூறுகிறது.

சிவனே பிரம்மாசரி வேடம் தாங்கித் தன்னை நோக்கித் தவம் புரிகின்ற பார்வதியை நோக்கிப் பேசுகிறார் 'சிவனுக்கு வீடுவாசல் சொத்து சுகம் ஏதாவது உண்டா? அவர் மண்டையோட்டை ஏந்தி மயானத்தில் திரிகின்றான். கிழட் டுக்காளை மீதேறி கைலாய மலை மீது சுற்றுகின்றான், அவனது தாய்த் தந்தையரை யாரறிவார்? பாம்பணிந்து சாம்பலைப் பூசி புலித்தோலை அரைக்கசைத்து கூத்தாடுகின்றானே. அவனை யா விரும்புகிறாய்? என்று கேட்டார். பார்வதி கோபமுற்றுக்கூறுகிறாள்,

அவர் மயானத்திலிருந்தாலும் மூவுலகிற்கும் நாயகன். வேண்டுதல் வேண்டாமையிலானாகிய அவனுக்குப் பாம்பும் பொன் அணியும் ஒன்றுதான். சாம்பலும் சந்தனமும் ஒன்றுதான். சொல்லப் போனால் அவரது அளப்பரிய பெருமையை யாரே உண்மையிலேயே அறியவல்லார்? என்று பதில் கூறினாள்.

நீலமணிமிடற்று ஒருவர் என்ற சொல் அவனது தன்னலமற்ற உலக நலத்தையே நாடும் பண்பையல்லவா பறைசாற்றுகின்றது. தேவரும் அசுரரும் நஞ்சைக் கண்டு அஞ்சியோட அனைவரையும் காத்தற்பொருட்டு கண்டத்திலே பதியவைத்துக்கொண்ட அவர் திருவருளை நினைந்து போற்றிய நூலோர் பலர். நஞ்சுண்டமைந்த அந்த நாகரிகத்தையும் இன்று உண்ணும் உணவிலும் பருகும் நீரிலும் உள்ளிழுக்கும் காற்றிலும் நஞ்சைக் கலக்கும் நாகரிகத்தையும் எண்ணிப் பார்ப்போமாக.

ருக், யஜுர், சாமம் என்ற மூவேதங்களுள் நடுவாயுள்ள யஜுர் வேதத்தின் நடுப்பகுதியிலமைந்துள்ளது ஸ்ரீருத்ரம். அதன் நடுவே அமைந்துள்ளது 'சிவம்' எனும் சொல். சிவனும் சக்தியுமாய் இருக்கும் அவன் அனைத்திற்கும் தோற்றுவாய். நீலமேனி வாலிழை பாகத்து ஒருவனது இருதாள் நிழற்கீழ் மூவகை உலகும் முகிழ்ந்தன முறையே என்று கூறுகிறது ஐங்குறுநூறு. இதையே 'பவன்' என்ற வேதச் சொல் குறிக்கிறது. ருத்ரன் பசுபதி, சர்வன் (உலகை ஒடுக்கு பவன்) கபர்தீ (சடையன்), கிரிசன் (கைலாயன்) பிருகத் (நெடியோன்), பூர்வஜன் (பழையோன்) என்றெல்லாம் வேதங்களில் போற்றப்படுகின்றான். உள்ளன்போடு போற்றும் உத்தம அடியாரின் உள்ளத்தில் கட்டையின் அளவின் வீற்றிருக்கும் இறைவன் உலகனைத்தையும் கடந்த கடவுளாய் அப்பாலைக்கப்பாலாய் இருக்கிறான் என்பதை கடோபநிடதம் கூறுகிறது. திருவாசகமும் கூறுகிறது.

'அங்குஷ்டமாத்ர, புருஷ, அந்தராத்மா ஸதா ஜனானாம் ஹ்ருதயே சந்நிவிஷ்ட, பூமிம் விச்வதோ வ்நத்வா அத்யதிஷ்டத் தசாங்குலம்' (கடோபநிடதம் -111 (3)

'அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக ஒப்பிவித்த உள்ளத் தாருள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய்'
– (திருவம்மானை)

திருக்கோயிலாகிற படமாடும் கோயில் நடமாடும் கோயிலாகிற நம் உடலமைப்பை ஒட்டியே அமைந்துள்ளது. நமக்குப் பாத ரட்சை கால், வயிறு, கழுத்து, மூக்கு, தலை, குடுமி முதலிய உறுப்புக்கள் கோயில் கட்டட அமைப்பை முறையே கீழிருந்து

மேலே நோக்கினல் உபானம், பாதம் (தூண்) ஸித்தி (சுவர்) க்ரீவா (கழுத்து) நாசிகை (மூக்கு) சிகரம் (தலை) ஸ்தூபி என்ற சிற்ப நூற் சொற்களால் குறிக்கப்படும் பகுதிகளோடு ஒத்திருப்பதைக் காணலாம். கோயிலில் ஐந்து பிரகாரங்களும் உடலின் தன் மையும்பிராணமயம் மனோமயம், விஞ்ஞானமயம் ஆனந்தமயம் என்று சொல்லப்படும் ஐந்து கோசங்களோடு ஒத்தன. கர்ப்ப கிருகத்திலுள்ள இறைவன் நம் உடலில் உள்ள உயிர் போன்ற வன். வெளிப் பிரகாரங்கள் தொடங்கி கருவறைக்குச் செல் லும் ஒருவன் உலகியலிலிருந்து சிறிது சிறிதாக விலகிச் சிவனோடு ஒன்றும் நிலைக்குச் செல்லத் தன்னைத் தயார் செய்து கொள் கிறன்.

மக்களின் பக்குவ நிலைகள் வெவ் வேருக இருப்பதால் அவரவர் நிலைக்கேற்ப சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் படி முறைகளை நமது ஆசாரியர்கள் அமைத்தும் வாழ்ந்தும் காட்டி யிருக்கிறார்கள், எப்பிறப்பினருக் கும் எந்நிலையினருக்கும் நமது சம யம் இடம்கொடுக்கிறதென்பதை நமது நாயன்மார்கள் வரலாற் றிலே, திருமுறைகளில் காண லாம். ஆவுரித்துத் தின்னும் புலையரேனும் நம் ஈசர்க்கு அன்ப ராகில் அவருக்கு முக்தியுண்டு. உண்மை பக்தி இருந்தால் அந்த பக்திவலையில் படுவான் பரமன். பொக்கமிக்கவர் பூவும் நீரும் கண்டு சிரிப்பாராம் நம் சிவபெரு மான். காஞ்சியில் பெருங்கோயில் எழுப்பிய காடவர்கோனைவிட திருநின்றவூரில் மனக்கோயில் எழுப்பிய பூசலாரின் பூசனையை உவந்து ஏற்றுக்கொண்டான் நம் புனிதன்.

பூசை செய்யும்போது நாம் இறைவனிடத்தில் எதைவேண்டு தல் வேண்டும் என்பதையும் குறிப்பிடுகிறார். ''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா, உன்னடி என்மனத்தே வழுவாதிருக்க வரம்தர வேண்டும்'' என்கிறார். ''பொன்னும் மெய்ப்பொருளும் தருவானிடத்தில் பொன்னையும் பொருளையும் போகத்தையும் வேண்டுவோரே இன்று பலர் இம் மைக்குப்பொருளையும் மறுமைக்கு வீட்டையும் மறவாது வேண்டி னல் பக்குவநிலை எய்தியபோது மெய்ப்பொருளையே நாடும் மனம் அமையும் உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினல் முறுக வாங் கக் கடைந்தால் அவன் முன் நிற்பான்.

சான்றோர், செந்தண்மைபூண்டு ஒழுகுவோர், வாழ்ந்தால் அவர் வழி மக்கள் அனைவரும் வாழ்வர். வானவர் வாழ்ந்தால் மக்கள் வாழ்வும் செழிக்கும். ஆனினம் வாழ்ந்தால்தான் உயிரியக்கம் உண்டு. ஆகவே அனைவரும் வாழ வாழ்த்தினர் ஞானசம்பந்தப் பெருமான். வாழ்க அந்தணர், வானவர், ஆனினம் என்பதாக, நமது ஞானசம்பந்தரும் அப்பரும் சமுதாயத்தில் மலிந்திருந்த பிற சமய தீய கருத்துக்களை அகற்றி நன்னெறியாம் சிவநெறியைப் பரப்பவே பாடுபட்டார்கள். அத் தகைய சமுதாயக் கண்ணோட்டத் துடன் ஒவ்வொருவரும் இறை யருளை வேண்டுதல் வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

யாண்டும் அரன் நாமம் சூழ்கவே.

# திருவிளையாடற் புராணம்

## உரை நடை.

இறைவனை நோக்கி, "பிரமனும் திருமாலும் இன்னமும் காணப் பெறாத அரிய திருமிடற்றையுடையவனே! வெள்ளியம்பலத்தில் திருக் கூத்தாடியருளும் தேவதேவனே! வானோர் உய்ய நஞ்சினை அருந்தி அமுதத்தை அளித்தருளிய உத்தமனே! எங்களைக் காத்தருள்க" என்று துதித்து, மேலும் எம்பெருமானை நோக்கி, "வேதத்தின் பொருளை உணராது உள்ளம் மயங்கி வாடிய எங்களுக்கு நீரே அவ் வேதங்களின் உட்பொருளாய் நின்றருளினீர்; அவ்வேதங்களுக்கு உம்மையன்றி வேறு பொருள் யாது?" என்று கூறி வணங்கினார்கள; அதன்பின்பு, அங்கயற்கண் அம்மையையும் அவ்வண்ணமே துதித்து, வணங்கி, முறைப்படி வலம் செய்து விண்ணிழி விமானத்திற்குத் தென்பக்கத்தில் வந்து, கல்லாலமர நீழலின்கண் எழுந்தருளிய தட்சணாமூர்த்தியின் திருமுன்னர் அடைந்தார்கள்.

### முனிவர்கள் தட்சணாமூர்த்தியை உபாசித்தல்

அங்கே கண்ணுவர் முதலிய முனிவர்கள், குளிர்ந்த பளிங்குமலை போன்ற வெள்ளிய திருமேனியும், அப்பளிங்கு மலையின் அடியில் பதித்த பவளம் போன்ற திருவடிகளும், சிவந்த திருவாயாகிய தாமரை மலரும், மூன்று கண்களும், திருக்கைகள் நான்கு, வேத புத்தகமும், அமுத கும்பமும், உருத்திராக்க வடமும், [1]சின்முத்திரை யும் உடைய மேலான பரமாசாரியராகிய தட்சணாமூர்த்தியின் திரு முன் வீழ்ந்து வணங்கித் துதித்தார்கள்; கல்லால மரத்தின் நிழலில் அமர்ந்தருளிய வேதமுதலாகிய பெருமானை வழிபடும் [2]இருபத்தி ரண்டெழுத்தாகிய மேதா மந்திரத்தை அரபத்த முனிவரால் உப தேசிக்கப் பெற்றுக் கார்த்திகை மாதத்தின் பௌர்ணமி முதற் கொண்டு அடுத்த கார்த்திகை மாதத்தின் பௌர்ணமி வரையும் நாடோறும் முப்பொழுதும் செபித்துத் தருப்பணம், ஓமம், பிராமண போசனம் முதலியன செய்து கொண்டுவந்தார்கள்.

---

1. சின்முத்திரையின் பொருட்குறிப்பினை, "மும்மலம் வேறு பட்டொழிய மொய்த்துயிர், அம்மலர்த் தாணிழல் அடங்கும் உண் மையைக் கைம்மலர்க் காட்சியிற் சுதுவ நல்கிய, செம்மலை அலதுளஞ் சிந்தியாதரோ" எனவரும் திருவானைக்காப் புராணச் செய்யுளால் அறியலாம்.

2. இம்மேதா மந்திரத்தைக் குருமுகமாக உணர்தல் வேண்டும்.

## முனிவர்களின் முன்னே கடவுள் குருமூர்த்தியாக வருதல்

அக்காலை, கண்ணுவர் முதலிய முனிவர்கள் அதிசயிக்குமாறு கல்லாலின் நீழலில் அமர்ந்தருளிய மௌன பரம குருமூர்த்தியாகிய இறைவன் முப்பத்திரண்டு இலக்கணமும் அமையப்பெற்ற பதினறு வயது நிரம்பிய ஒரு பிராமணக் குருவடிவங்கொண்டு எழுந்தருளி வந்தார். அவர் நெற்றியில் அணிந்திருந்த திரிபுண்டரம் நெற்றியி லுள்ள அனற்கண்ணை மறைத்தது; கழுத்திலணிந்த கண்டிகையோடு திருச்செவியில் அணிந்த குண்டலங்கள் இளங்கதிரவனைச் சித்தரிப்பது போல் ஒளி வீசின. திருமார்பில் உத்தரீயமும் முப்புரி நூலும் முத்துக் களை இடையிட்டுக் கோவை செய்த உருத்திராக்க மாலையும் அடியார் களின் ஆணவமல இருளைப் போக்கும் ஒளிபோல் ஒளிவீசி விளங்கின. இரு கைகளிலும், தோள்களிலும் கண்டிகைகள் திகழ்ந்தன. வெள்ளிய ஆடையாலாகிய கோவணத்தின் அருகில் பட்டிகை சூழ்ந்து ஒளி வீசியது. தாமரை மலர்போன்ற பாதங்களில் சிலம்புகள், வண்டுகள் இசை பாடுதல்போல ஒலித்தன. தொண்டர்களுடைய மாசினை அகற்றும் திருவடியின்மேல் வீரக்கழல் முழங்கியது. வலக்கையில் குற்றமற்ற பவித்திரமும், இடக்கையில் சிவஞானபோதம் எழுதிய புத்தக மும் விளங்கின. மறைகள் திருவடிகளுக்குப் பாதுகைகளாகத் திகழ்ந்தன. தேன் நிறைந்த தாமரை மலரினுள் முழங்கும் வண்டின் ஒலிபோல, நாவும் இதழும் புடைபெயர்ந்து துள்ளத்தோன்றும் வேத வொலி தொண்டர்களின் செவியாகிய வாய்க்கால் வழியாக ஓடி, உள்ளமாகிய வயலில் பாய்ந்து, உவகையாகிய பயிர்களை வளர்த்தது. திருவாயிலே புன்னகை திகழ்ந்தது. இவ்வாறு நாத தத்துவ முடி வாய் நான்மறைகளின் முடிவில் ஞான வடிவாய், எங்கும் நிறைந்த பூரணத் தன்மையாய் விளங்கும் பழம்பொருளாகிய தட்சணுமூர்த்தி முனிவர்கள் தரிசிக்குமாறு எளிதில் வந்து வெளியே நின்றருளினுர்.

## குருமூர்த்தியினிடத்தில் முனிவர்களின் வேண்டுகோள்

அதுகண்ட பெருமைமிக்க முனிவர்கள் முழுமதியினைக் கண்டு ஆரவாரிக்கும் கடலைப்போல், ஆசாரிய வடிவுகொண்டு எழுந்தருளிய இறைவனை வணங்கி நின்று, ''அளவற்ற கலைகளின் உறைவிடமே! மறைகளின் பொருளாய் நின்ற மறையோனே! உன் அடைக்கலம்'' என்று துதித்து மகிழ்ந்தனர். தேசிக வள்ளல் அவர்கள்மீது திருக்கண் சாத்தி, "குற்றமற்ற தவமுடையீர்! நீங்கள் விரும்புவது யாது?" என்றுர். முனிவர்கள் அஞ்சலி செய்து, ''எம்பெருமானே! அடியேங் களும் சகல உலகத்தாரும் உய்யும்பொருட்டு வேதங்களின் பொருளை இப்பொழுது உபதேசித்தருள வேண்டும்'' என்று விண்ணப்பித்தனர்.

### குருமூர்த்தி முனிவர்களுக்கு வேதப்பொருளைக் கூறல்

உயிர்களின் மிகக்கொடிய பாசங்களைப் போக்கியருளும் பரங் கருணைத் தடங்கடலாகிய ஆசாரியர், அம்முனிவர்களுடன் திருவால வாயுடையாராகிய சிவலிங்கப் பெருமான் திருமுன்பு சென்று வேதங் களின் பொருளை அருளிச் செய்வாரானார்; "முனிவர்களே! கேளுங்கள்: வேதங்களின் பொருள்களனைத்தும் பெரிதும் இரகசியமாகும்; அவ் வேதப் பொருளை அறிதலே இம்மை இன்பப் பயனுக்கும், பாசபந்தத் தைப் போக்கும் வீடுபேற்றின் பயனுக்கும் கருவியாகும். சுயம்புவாய் (தானே தோன்றியதாய்), உத்தமோத்தமமாய், தத்துவங்களின் வடிவமாய் விளங்கும் இச்சொக்கலிங்கம் நித்தமாய் வேதங்களனைத் திற்கும் ஆதிகாரணப் பொருளாய், சுத்தாத்துவிதப் பொருளாய், சுயம்பிரகாசமாய் விளங்குவது. எங்கும் நிறைந்த பராபரன் (பராசத் திக்கு மேலானவன்) என்றும், விஞ்ஞானன் (மேலான ஞானவடிவான வன்) என்றும், நிராமயன் (நோயில்லாதவன்) என்றும் நூல்கள் கூறு கின்ற பரப்பிரமமாகிய இம்மூர்த்தியின் திருவுருவமே வேதமாகும். இவ்வேதத்தின் பொருளும் இச்சுந்தர மூர்த்தமாய் இங்கே எழுந்தரு ளிய சிவலிங்கமே ஆகும். இச்சிவலிங்கமும் வேதமும் வேறல்ல என்று உண்மை நூலோர் கூறுவர். ஆதலால் வேதமும் ஒன்றே; அவ்வேதத் தின் பொருளும் ஒன்றே.

### பிரணவத் தோற்றம்

அவ்வேதம், சாகைகளின் பேதத்தினால் அனந்த பேதமாகத் தழைத்துள்ளது. அச்சாகைகளனைத்தும் இம்மூர்த்தியையே துதிக்கும். படைத்தல் காத்தல் அழித்தல் என்ற முத்தொழிற்கும் ஒருவனாகிய இச்சொக்கலிங்க மூர்த்தி, தனது சத்தியால் மும்மூர்த்தியாய் இருந் தருளினார். மூன்றுலகங்களையும் நான்முகனாகிப் படைத்துத் திருமா லாகி நிலைபெறச் செய்து உருத்திரனாகி அழித்து அம்மூவருக்கும் தலை வனாய்ச் சிதாகாயமே திருமேனியாய் ஆதிஅந்தமின்றி அறிவற்ற பேரொளியாய் உள்ள இச்சொக்கலிங்க மூர்த்தியின் வடிவத்தில் கீழ்ப் பாகம் ஆன்ம தத்துவமான பிரமனின் பாகமும், நடுப்பாகம் வித்தியா தத்துவமான திருமாலின் பாகமும், நுனிப்பாகம் சிவ தத்துவமான உருத்திரனின் பாகமும் தோன்றும். இம்மூவகைத் தத்துவங்களி லிருந்து எல்லாத் தத்துவமும் தோன்றும். ஆன்ம தத்துவத்திலிருந்து அகாரமும், வித்தியா தத்துவத்திலிருந்து உகாரமும், சிவ தத்துவத்தி லிருந்து மகாரமும் தோன்றும். விந்து நாதங்களோடு அகர உகர மகரம் மூன்றும் கூடுதலால் பிரணவம் தோன்றும். தாரக மந்திரமாகிய இப் பிரணவத்தினின்றும் மூன்றுவாக்கிய வடிவமான பதங்களைக்கொண்ட

காயத்திரி தோன்றும். இக் காயத்திரி [1]சமட்டி, வியட்டி என இரு வகையாக நின்று விரும்பிய பொருள்களனைத்தையும் பெறுதற்குக் காரணமாய் விளங்கும்.

### வேதாகமோற்பத்தி

சமட்டி, வியட்டி ஆகிய இவ்விரண்டும் இச்சொக்கலிங்க மூர்த்தியின் திருவருட் சத்தியால் நான்கு வே தங்களையும் ஈன்றன. அந்நான்கு வேதங்களும் பின்பு அளவிறந்தனவாய் விரிந்தன. பிரணவத்தை முதலில் கொண்ட மந்திரங்களும் அளவிறந்தனவாய் விரிந்தன. இன்னும் அப்பிரணவத்தினின்றும் அகரம் முதலிய எழுத்துக்களெல்லாம் தோன்றின. அவ்வெழுத்துக்களினாலே இச் சொக்கலிங்க மூர்த்தியின் உச்சிமுகமாகிய ஈசான முகத்திலே சிவாகமங்கள் இருபத்தெட்டும் தோன்றின. கிழக்கு முகமாகிய தற்புருட முகத்தினின்று இருபத்தொரு சாகைகளோடும் இருக்கு வேதம் தோன்றியது; தெற்கு முகமாகிய அகோர முகத்தினின்று நூறு சாகைகளோடும் யசுர் வேதம் தோன்றியது; வடக்கு முகமாகிய வாமதேவ முகத்தினின்று ஆயிரஞ் சாகைகளோடும் சாம வேதம் தோன்றியது; மேற்கு முகமாகிய சத்தியோசாத முகத்தினின்று ஒன்பது சாகைகளோடும் அதர்வணவேதம் தோன்றியது. வேதங்கள் நான்குவகை; ஆதலால் [2]வருணங்களும் ஆச்சிரமங்களும் தனித்தனியே நான்காயின. தருமங்களும் யாகாதி கருமங்களும் வேதங்களின் நெறியிலே தோன்றின. அவ்வேதங்களும் கரும காண்டம், ஞான காண்டம் என இருவகைப்படும். அவற்றுள் கரும காண்டம் (கருமம்-செய்கை) இச்சொக்கலிங்க மூர்த்தியின் பூசா விதிகளை அறிவிக்கும். ஞான காண்டம் (ஞானம்-அறிவு) இத்திருவாலவாயுடையாருடைய சச்சிதானந்த வடிவத்தை அறிவிக்கும்.

### சிவபெருமானே வீடளிப்பவர்

வேர் பருகும் நீரினாலே கிளைகள் தளிர்த்தாற்போல இம்முழுமுதற் கடவுளுக்கு ஊட்டும் அவியுணவு இவ்விறைவன் வடிவமாகிய தேவர்

---

1. சமட்டி-தொகுத்துச் சொல்வது; அஃது 'ஓம்' என நிற்பது. வியட்டி-பகுத்துச்சொல்வது; அஃது அகார உகார மகார விந்துநாதம் என்னும் ஐந்தும் கூடி நிற்பது.

2. வருணம்-சாதி; அஃது அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நான்காம். ஆச்சிரமம்-நிலை; அது பிரமசாரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் என நான்காம்.

களுக்கும் பிறர்க்குப் நிறைவினைச் செய்யும் இப்பரமன் திருமுன் இயற்றும் நித்தியம், நைமித்தியம், காமியம்என்னும் இம்மூன்று கருமங்களுக்கும், உலகத்தவர் இன்பப் பேற்றினையும் வீடுபேற்றினையும் வேண்டிய வண்ணமே பெறும் பொருட்டுப் புரியும் சிவார்ச்சனைக்கும் ஸ்ரீசிவலிங்கமே காரணமாயுள்ளது.

ஞானகாண்டம்—கருமகாண்டம்

வேதங்கள் பல சாகைகளைக் கொண்டுதேடியும் உணராது கதறி வாய்சோர்ந்து மயங்க, அகண்ட பரிபூரணமாய் நிறைந்த சொரூப சிவமாகிய இச்சிவலிங்கத்தைக் கருமகாண்டத்தில் கூறிய முறையினின்றும் தவறாத பூசை முறையினாலும், ஞானகாண்டத்தில் கூறிய நெறியினின்று திருவருளால் ஒன்றுமாகாது கலக்கும் (அல்லது சிவோகம்பாவனை புரியும்) உணர்வினாலும் தெளிக. உங்கட்கு நாமுணர்த்திய அரிய வேதங்களின் உட்கிடைப் பொருள் மற்றவர்கள் அறிந்து சொள்வதற்கு அரிதாகும்.

வைதிகமும்—வைதிக சைவமும்

சிவபூசை முதலிய நற் கருமத்தாலே ஞானம் கைகூடும்; அந்த நற்கருமம்[1]சித்த சுத்தி (உள்ளத் தூய்மை)யை அளிக்கும்; அச்சித்த சுத்தியைத் தருமம் கொடுக்கும்; அத்தருமத்தாலே சாந்தி உண்டாகும், அச் சாந்தியினாலே அட்டாங்கயோகம் தோன்றும். அட்டாங்கயோகமே ஞானங்கம் எனப்படும். [2]கிரியையினாலும் ஞானத்தினாலும், சிவபக்தி, சிவபூசை, சிவதரிசனம், சிவலிங்கம் தாபித்தல், மெய்யடியார் வழிபாடு, சிவச்சின்னம் தாங்குதல், குருபத்தி ஆகிய இவையெல்லாவற்றையும் அறியலாம். [3]வேதத்தின் வழியே நடக்கும் மதங்களனைத்திற்கும் வேதமே பிரமாணமாகும். அவ் வேதத்தின் வழியே சென்று அதற்குப் பொருந்தக்கூறும் ஸ்மிருதிகள் அனைத்தும் அம்மதங்களுக்கு அனுகுண(உதவி)ப்பிரமாணமாகும். வேதத்திற்குஅனுகுணப்பிரமாணமாகிய ஸ்மிருதிக்கொள்கைகள் ஸ்மார்த்தம் என்றுகூறப்படும். ஸ்மார்த்தத்தைத் தழுவிய வேதநெறிகள் வைதிகம் எனப்படும். அவற்றுள்

1. சித்த சுத்தி - சற் கருமங்களைச் சிவார்ப்பணமாகச் செய்வதால் வரும் பயன்.

2. கிரியையினாலும் ஞானத்தினாலும் - இங்குவேதத்தின் கருமகாண்டத்தாலும் ஞான காண்டத்தாலும் அல்லது சிவாகமத்தில் கிரீயா பாதத்தாலும், ஞானபாதத்தாலும் என்று பொருள்கொள்ளினும் கொள்ளலாம்.

3. இங்கு, வேதம் பொதுநூல் என்பதும் வேதாந்தத் தெளிவாகிய சைவசிந்தாந்தம் கூறும் சிவாகமம் சிறப்புநூல் என்பதும் பெறப்படும்.

மிக மேன்மையாகக் கூறப்படுவது [1]சுத்த சன்மார்க்கமாகிய வைதிக சைவம் ஆகும்.

### இறைவன் முனிவர்களுக்கு ஆசிகூறி மறைதல்

போகத்திற்கும் வீட்டிற்கும் காரணமாக விளங்கும் சிவமயமாகிய மறைகளின் உட்பொருளை உங்கள் அறியாமை நீங்கும் வண்ணம் உரைத்தோம். [2]நாம் கூறிய இப்பொருளைக் காட்டிலும் மேலான பொருள்வேறில்லை; இப்பொருள்கள் அனைத்தும் உங்களுக்கு மயக்கந் தீர விளங்குவதாக'' என்றருளி அருள் கனிந்த திருவு நவத்தையுடைய சிவபெருமானாகிய ஞானமூர்த்தி கண்ணுவர் முதலிய முனிவர்களின் முதுகுகளில் தமது அருளாகிய திருக்கரத்தாலே தடவிக்கொடுத்து விட்டுச் சிவலிங்கத்தினுள் மறைந்தருளினர்.

செய்யுள் — 42
ஆகச் செய்யுள் — 1194

## 17. மாணிக்கம் விற்ற படலம்

### வீரபாண்டியன் புலியால் பற்றப்பட்டு இறத்தல்

வீரபாண்டியனுக்கு ஐந்து போகங்களும் விளையும் நிலப்போல [3]ஐம்புல இன்பங்களை விளைவிக்கும் காயக்கிழத்தியர் பலர் இருந்தனர். அவர்களிடத்தே மன்மதனை ஒத்த புதல்வர்கள் பலர் பிறந்து நல்ல பயிருக்குக் களைபோல வளர்ந்து வந்தனர். ஆனால், தன் குல மனைவியின் மூலம் வீரபாண்டியனுக்கு ஒரு குழந்தையேனும் பிறக்கவில்லை. வீர பாண்டியனும் அவன் குல மனைவியும் சோமசுந்தரக்கடவுளை நோக்கி, அட்டமி, சதுர்த்தி, சோமவாரம் ஆகிய சிவ விரதங்களை அனுட்டித்து ஒழுகுவாராயினர். சிவபெருமான் திருவருளால் சில நாட்கள் சென்றபின் கங்கையினும் தூய்மையுள்ள அருந்ததி போன்ற கற்பினையுடைய அரசி வயிற்றிலே சிறிய ஆலம்வித்தில் தோன்றிய முளைபோல

---

1. இச் சுத்த சன்மார்க்கமாகிய வைதிக சைவமே வீடு பேற்றை அளிப்பது. இதனை, '' சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத சாத்திரச் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து, பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம் பசுபதிபா சந்தெரித்துப் பரமசிவனைக் காட்டும்'' என வரும் சிவஞான சித்தி அடிகளாலும் உணரலாம்.

2. இங்கு, 'நால்வேதமும் பொருள்களும் அருளி, அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த வாலவா யாவது மிதுவே'' (சம்பந்தர் தேவாரம்- திருவாலவாய்) எனவரும் அடிகள் சிந்திக்கற்பலான.

3 இங்கு, ''கண்டுகேட் டுண்டுயிர்த்(து) உற்றறியும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே உள''எனவரும் திருக்குறள் உன்னற்பாலது.

ஒரு சற்புத்திரன் வந்து தோன்றினன். அப்புத்திரனுக்கு வேதமுறைப்படி சாதாகன்ம முதலாகப் பிறசடங்குகளை வீரபாண்டியன் சிறப்புறச் செய்து முடித்தான். அச் செல்வப் புதல்வன் அழகுபெற வளர்ந்து வருங்காலத்தில் வீரபாண்டியன் வேட்டையாடச்சென்று ஊழ்வினைப் பயனுல் புலியினுல் பற்றப்பட்டுத் தேவர்க்கு நல்விருந்து ஆயினன்.

### வீர பாண்டியனுக்கு இறுதிக்கடன் செய்தல்

வீரபாண்டியன் விண்ணுலகமைடந்ததை அறிந்த அரசியும், காமக்கிழத்தியரும், நகரமக்களும் துயரக் கடலில் ஆழ்ந்தனர் அப்பொழுது காமக்கிழத்தியரின் புதல்வர்கள் இதுவே ஏற்றசமயம் என்று கருதி யானை குதிரை முதலானவற்றையும், பலவகைத் திரவியங்களையும், ஆபரணங்களையும், கிரீடத்தையும் கவர்ந்து கொண்டு போய் மறைந்தனர். அமைச்சர்கள் இளங்குமரனைக் கொண்டு விண்ணுலகமடைந்த வீரபாண்டியனுக்கு இறுதிக்கடன்களைச் செய்துமுடித்தனர்

### அரசகுமாரனுக்கு முடிசூட்ட எண்ணுதல்

பிறகு, அமைச்சர்கள் வீர பாண்டியனின் புதல்வனுக்கு முடிசூட்ட நினைந்து கருவூலத்தினைத் திறந்து பார்த்தனர்; அங்கு நவமணிகள் இழைத்த முடியையும், வேறு சில பொருள்களையும் காணுது திகைத்துவாடி மனம் வருந்தினர்; அவை யாவும் பகைவர்களே (காமக்கிழத்தியர்களின் புதல்வர்களே) கவர்ந்துகொண்டு போயினர் என்று கருதினர்; ''வேறு சிறந்த மணிமுடி ஒன்றைச் செய்வோம் என்று கருதினுலோ விலையுயர்ந்த பெரிய மணிகள் இல்லை. முடி இல்லையாயின் அரசிருக்கையும் இல்லை; அரசியல் இல்லையாயின் உலகம் துன்பமடையும்; 'இங்கு நம்மால் செய்யத் தகுவது யாது' என்று தங்களுக்குள்ளே ஆலோசித்துச் சொக்கலிங்கப் பெருமானின் திருவருளை அறிவோம்'' என்று தெளிந்தனர்; கவலை மிகுந்த உள்ளத்தோடு அரண்மனையினின்றும் அரச குமாரனை அழைத்துக்கொண்டு புறப்பட்டுத் திருக்கோயிலின் திருக்கோபுர வாயிலை அடைந்தனர்.

### சோமசுந்தரக் கடவுள் வணிகராய்த் தோன்றி வருதல்

அப்போது, சோமசுந்தரக் கடவுள் இடையில் கோவணமாகப் போக்கிய வெள்ளிய ஆடை விளங்கவும், பிடரியின்மேல் பல ஒளி வீசும் இரத்தினப் பொதி தொங்கவும், தோளின்மேல் விலையுயர்ந்த வாகுவலயம் சூரியனைப்போல ஒளிவீசவும், வலப்பாலில் பூணூல் புரளவும், மார்பிலே இந்திர வில்லைப்போல இரத்தின மாலை விளங்வுகம்,

காதணிகளான குழையும் குண்டலமும் தோளில் புரண்டு ஆடவும், திருவடிகள் நிலத்திலே பொருந்தவும் ஒரு வணிகராய் வேடங்கொண்டு அவர்கள் எதிர்வந்து தோன்றியருளினர்.

அங்ஙனம் தோன்றிய வணிகர் எதிர் வருகின்ற அமைச்சர் முதலியோரை நோக்கி, "நீங்கள் கவலை கொண்ட மனத்தராய் வரும் செய்தி யாது?" என்று வினவினர். மந்திரிகள் முன் நிகழ்ந்தவற்றையெல்லாம் முறைப்படி அவருக்குக் கூறினர். அதுகேட்ட வணிகர், "நீங்கள் ஏன் கவலை கொள்ளுகின்றீர்கள்? என்னிடத்தே நவரத்தினங்களும் உள்ளன; அவை பதினாயிரம் கோடி பொன் விலைகொண்டன; அவற்றை யெல்லாம் இதோ காட்டுகிறேன்; பாருங்கள்!" என்று கூறிக் கீழ்த்திசையினை நோக்கி அமர்ந்தார். ஒரு கரிய கம்பலத்தை விரித்து அதன் நடுவில் மாணிக்கத்தையும், அதனைச் சுற்றிக் கிழக்கு முதலிய எட்டுத் திசைகளிலும் முறையே, முத்து முதலிய எட்டு மணிகளையும் எடுத்து வைத்து, "இம்மணிகள் வலன் என்னும் அசுரனுடைய உடலின் கூறுகள்" என்று கூறினர். அதனைக் கேட்ட அமைச்சர்கள் வியந்து, "வலன் என்னும் அச்செம்மல் யார்? அவன் உடல், மணிகள் ஆயினமை எப்படி? கூறியருள வேண்டும்" என்று வேண்டினர்.

## வலன் என்னும் அசுரன் வரலாறு

வணிகர் அமைச்சர்களை நோக்கி, வலன் என்பவன் ஓர் அசுரன். அவன் முன்னொரு காலத்தில் சிவபெருமானுடைய திருவடிகளைப் பூசித்து வழிபட்டான். அப்போது சிவபெருமான் அவனுக்கு முன் தோன்றி, "உனக்கு யாது வேண்டும்" என்று வினவியருளினர். வலாசுரன் சிவபெருமானை வணங்கி நின்று, "யான் போரின்கண் யாராலும் பிளவுண்டு இறவா வரத்தையருளுக; அங்ஙனமின்றி சூழ்வினை உற்று இறப்பேனாயின், என் உடல் துறவிகளும் விரும்பும் வண்ணம் நவரத்தினங்களாக வேண்டும்" என்று வேண்டினன், சிவபெருமான் அவனுக்கு அவ்வாறே வரம் அருளினர். அப்பொழுதே வலாசுரன் தேவலோகம் சென்று இந்திரனை எதிர்த்துப் போரிட்டான். இந்திரன் வலனை எதிர்த்துப் போரிடும் வலியிலனாய், புறங்கொடுத்து ஓடினன். தோல்வியுற்ற இந்திரன், "வலன், இறவாத வரம் பெற்றவன்; அவனை மீண்டும் எதிர்த்துப் போர் புரிந்தாலும் வெல்லுதல் அரிது: ஆதலால், அவனைச் சூழ்ச்சியால் இயமன் உலகிற்கு அனுப்புதல் வேண்டும்" என்று கருதிப் படைக்கலமின்றித் தேவர்களனைவரும் தன்னைச் சூழ்ந்துவரத் தேவயானைமேல் போர்க்களத்தை அடைந்தான்.

# திருக்கணித பஞ்சாங்கம்

## தி. கி. நாராயணசாமி, கடலூர்.

ரௌத்திரி ஆடி (ஜுலை—ஆகஸ்டு)

நாள், திதி, நட்சத்திரக் குறிப்பு (மணிக்கணக்கில்)

| தமிழ்வ | ஆங்கிலம்வ | கிழமை | திதி | | நட்சத்திரம் | |
|---|---|---|---|---|---|---|
| 1 | (16—7—80) | புதன் | சதுர்த்தி | 15-20 | பூரம் | நாள்முழுவதும் |
| 2 | (17—7—80) | வியாழன் | பஞ்சமி | 17-25 | ,, | 7-48 |
| 3 | (18—7—80) | வெள்ளி | சஷ்டி | 19-46 | உத்திரம் | 10-39 |
| 4 | (19—7—80) | சனி | சப்தமி | 22-11 | அஸ்தம் | 13-39 |
| 5 | (20—7—80) | ஞாயிறு | அஷ்டமி | 24-26 | சித்திரை | 16-38 |
| 6 | (21—7—80) | திங்கள் | நவமி | 26-18 | சுவாதி | 19-09 |
| 7 | (22—7—80) | செவ்வாய் | தசமி | 27-37 | விசாகம் | 21-15 |
| 8 | (23—7—80) | புதன் | ஏகாதசி | 28-17 | அனுஷம் | 22-42 |
| 9 | (24—7—80) | வியாழன் | துவாதசி | 28-14 | கேட்டை | 23-33 |
| 10 | (25—7—80) | வெள்ளி | திரயோதசி | 27-34 | மூலம் | 23-41 |
| 11 | (26—7—80) | சனி | சதுர்த்தசி | 26-16 | பூராடம் | 23-12 |
| 12 | (27—7—80) | ஞாயிறு | O பௌர்ணமி | 24-24 | உத்திராடம் | 52-13 |
| 13 | (28—7—80) | திங்கள் | பிரதமை | 22-10 | திருஓணம் | 20-48 |
| 14 | (29—7—80) | செவ்வாய் | துவிதியை | 19-39 | அவிட்டம் | 19-06 |
| 15 | (30—7—80) | புதன் | திரிதியை | 16-58 | சதையம் | 17-13 |
| 16 | (31—7—80) | வியாழன் | சதுர்த்தி | 14-14 | பூரட்டாதி | 15-17 |
| 17 | (1—8—80) | வெள்ளி | பஞ்சமி | 11-32 | உத்திரட்டாதி | 13-23 |
| 18 | (2—8—80) | சனி | சஷ்டி | 8-57 | ரேவதி | 11-38 |
| 19 | (3—8—80) | ஞாயிறு | சப்தமி<br>அஷ்டமி | 6-35<br>28-30 | அசுவனி | 10-06 |
| 20 | (4—8—80) | திங்கள் | நவமி | 26-43 | பரணி | 8-50 |
| 21 | (5—8—80) | செவ்வாய் | தசமி | 25-18 | கார்த்திகை | 7-54 |
| 22 | (6—8—80) | புதன் | ஏகாதசி | 24-17 | ரோகணி | 7-19 |
| 23 | (7—8—80) | வியாழன் | துவாதசி | 23-41 | மிருகசிரிஷம் | 7-09 |
| 24 | (8—8—80) | வெள்ளி | திரயோதசி | 23-32 | திருஆதிரை | 7-24 |
| 25 | (9—8—80) | சனி | சதுர்த்தசி | 23-51 | புனர்பூசம் | 8-07 |
| 26 | (10—8—80) | ஞாயிறு | ● அமாவாசை | 24-39 | பூசம் | 9-17 |
| 27 | (11—8—80) | திங்கள் | பிரதமை | 25-56 | ஆயில்யம் | 10-54 |
| 28 | (12—8—80) | செவ்வாய் | துவிதியை | 27-38 | மகம் | 12-59<br>மாலை ஆடிபூரம் |
| 29 | (13—8—80) | புதன் | திரிதியை | நாள்முழுவதும் | பூரம் | 15-28 |
| 30 | (14—8—80) | வியாழன் | திரிதியை | 5-43 | உத்திரம் | 18-16 |
| 31 | (15—8—80) | வெள்ளி | சதுர்த்தி | 8-04 | அஸ்தம் | 21-15 சுதந்திர நாள் |

# 'ஸ்ரீ குமர குருபரர்'

## சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா ) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

## விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின்பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள்பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| உள் அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

முகவரி :- நிர்வாக ஆசிரியர்:- 'ஸ்ரீ குமரகுருபரர்'
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் Pin. 612 504
(தஞ்சை மாவட்டம்)

---

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் (விளக்க உரையுடன்) | | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மைநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் வினாவெண்பாவும் | ,, | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. | 3—00 |
| மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் – கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு ( கோ. வன்மீகநாதன் ) | | விலை ரூ. | 15—00 |

ஒவ்வொன்றிலும் 20 பிரதிகளுக்குக் குறையாமல்
வாங்குவோருக்கு 20% கழிவு உண்டு.

தபாற்கட்டணம் தனி. 1000 ரூபாய்க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச் செலவு இலவசம்.

நூல்கள் கிடைக்குமிடம்:-
நிர்வாக ஆசிரியர் : 'ஸ்ரீ குமரகுருபரர்'
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் Pin 612 504
(தஞ்சை மாவட்டம்)

ஸ்ரீகாசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி :- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் – Pin 612 504